# வாழியூர் கம்பன் கழகம்





## 31-ம் ஆண்டு கம்பன் விழா மலர்
## (6.2.2010 ; 7.2.2010)




## கம்பன் கழகம்

201, பிள்ளையார் கோயில் தெரு, வாழியூர்.

(வழி) ஒண்ணுபுரம் - 632 315.

திருவண்ணாமலை மாவட்டம்.

தொலைபேசி : 04173 - 243724, 243828, 293976

## வாழியூர் கம்பன் கழகம்

# 31-ம் ஆண்டு கம்பன் விழா மலர்

## (6.2.2010 ; 7.2.2010

926





## கம்பன் கழகம்

201, பிள்ளையார் கோயில் தெரு,
வாழியூர்.
(வழி) ஒண்ணுபுரம் - 632 315.
திருவண்ணாமலை மாவட்டம்.
தொலைபேசி :
04173 - 243724, 243828, 293976

## மலர்க்குழு உறுப்பினர்கள்

திருவாளர்கள் :

வாழியூர் **வே. இராசவேலன்**, க.மு; கல்.மு ;
செயலாளர், கம்பன் கழகம், வாழியூர்.

**மா. சானகிராமன்**, பொருளாளர், கம்பன் கழகம், வாழியூர்.

**வி.சி. தினகரன்**, க.இ ; ச.இ; வழக்கறிஞர், வாழியூர்.

**பெ. செயவேலு**, க.இ ; பெரிய அய்யம்பாளையம்.

**வ. செந்தமிழச்செல்வன்**, அறி.இ.; தினமலர் நிருபர்,
கண்ணமங்கலம்.

**இராச. நிர்மலா சரவணன்**, க.மு.; ச.இ.;
வழக்கறிஞர், வாழியூர்.

**அ. பிரகாசு**, கண்ணமங்கலம்.

**கோ. செகதீசன்**, டிசி.இ.இ., வணி.மு., அழகுசேனை.

**கு. மாதவன்**, இல.இ., அத்திமூர்.

**சு. சரவணன்**, சு. தாங்கல்.

**சீனு (எ) சிவா**, க.இ., சு. தாங்கல்.

**மு. இரவிச்சந்திரன்**, சின்னபுத்தூர்.

**நீ. இரவி**, க.இ., மங்களாபுரம், படவேடு.

**ச. ஞானவேல்**, க.மு ; கல்.இ., வாழியூர்



முன்னமருட் கம்பனெனும் நாமம் கேட்டான்

மூர்த்தியவன் இராமகாதை முழுதும் கேட்டான்

பின்னருள்ள சான்றோர்கள் பேசக் கேட்டான்

பேர்த்துமவன் சேவடிக்கே பிச்சன் ஆனான்

அன்னையுடன் அத்தனுமே கம்ப னென்றான்

அவன் பெயராய்த் தன்பெயரை ஆக்கிக் கொண்டான்

தன்னைமறந் திட்டான்தன் நாமம் கெட்டான்

தலைப்பட்டான் சேர்ந்திட்டான் தலைவன் தாளே !

– கவிஞர் சொ.சொ. மீ. சுந்தரம்

## எங்களூருக்கு வந்து செல்லும் பேருந்துகள்

**வேலூரிலிருந்து கண்ணமங்கலம் வழியாக வாழியூருக்கு பேருந்து நேரங்கள்**

தடம் எண். 22, 24 அரசு நகரப் பேருந்து
முற்பகல் 5.55, 8.10, 9.25, 10.40, 12.00
பிற்பகல் 1.10, 2.40, 3.40, 6.00, 7.15, 9.10, 9.50

**ஸ்ரீ ரேணுகாம்பாள் பேருந்து**

**செய்யாரிலிருந்து**
முற்பகல் 10. 45
பிற்பகல் 2.45

**ஆரணியிலிருந்து**
முற்பகல் 11.50
பிற்பகல் 3.50

**ஆரணியிலிருந்து தடம் எண் 22 அரசுப் பேருந்து**

முற்பகல் 6.00
பிற்பகல் 3.30

**எங்களூரிலிருந்து**
**கண்ணமங்கலம் 9 கி.மீ.,**
**வேலூர் 29 கி.மீ., போளூர் 29 கி.மீ.,**
**ஆரணி 20 கி.மீ.,**
**திருவண்ணாமலை 50 கி.மீ.,**

# எங்களூர்

எங்களூர் வரலாற்றுச் சிறப்புமிக்க ஊர். படவேடு என்ற இடத்தில் சம்புவராய மன்னர்கள் கோட்டை கட்டி அரசாண்டனர். அக்கோட்டைக்கு வழியாக எங்களூர் இருந்ததாம் ! வழியூர் என்பது மருவி வாழியூர் என்று ஆயிற்றாம்.

சம்புவராயரின் குலதெய்வம் எக்லாதேவி. அந்த அம்மன் எங்களூரில் கோயில் கொண்டிருந்தாள். ஆகவே எங்களூருக்கு எக்லாவரம் என்ற பெயரும் உண்டு.

எங்களூருக்குப் பக்கத்தில் சுமார் 3 கி.மீ. தூர்த்தில் படவேடு இருக்கிறது. இங்கு இரேணுகாதேவி, ஈஸ்வரன், யோக இராமர், முருகன் ஆலயங்கள் உண்டு. கோட்டைமலை என்ற மலையின் மீது வேணுகோபாலசுவாமி கோயில் உள்ளது. அம்மலை மீது ஏறி இறைவனை வணங்கும் போது திருப்பதி மலை மீது இருக்கும் படியான உணர்வு ஏற்படும்.

எங்களூருக்கு அருகில் சுமார் 1 கி.மீ. தூர்த்தில் கணேசபுரம் என்ற ஊரில் விநாயகர் கோயில் உள்ளது. அங்கு மிகப்பெரிய விநாயகர் சிலை உள்ளது. அது கைலாய விநாயகர் என்று அழைக்கப்படுகிறது.

| | | |
|---|---|---|
| எங்களூரின் மொத்தப் பரப்பு | : | 251 ஹெக் 41.5 ஹேர் |
| குடியிருப்பு பகுதி மட்டும் | : | 6 ஹெக் 71.5 ஹேர் |
| வீடுகள் | : | 436 |
| மக்கள் தொகை | : | 2571 |
| மாவட்டம் | : | திருவண்ணாமலை |
| வட்டம் | : | போளூர் |
| நாடாளுமன்ற தொகுதி | : | திருவண்ணாமலை |
| சட்டமன்ற தொகுதி | : | கலசபாக்கம் |
| ஒன்றியம் | : | போளூர் |

# அறிஞர்கள் பார்வையில் வாழியூர் கம்பன் கழகம்

## அருள்மொழியரசு திருமுருக கிருபானந்தவாரியார்

☞ வாழியூர் வாழியவே மாண்புகம் பன்கழகம்
ஏழிசைபோல் என்றும் இனிதோங்கி - வாழியவே
அன்ரெலாம் கூடி அரிய தமிழ்த் தொண்டியற்றி
இன்பமுடன் வாழ்க இனிது.

☞ எல்லோரும் ஓரினமாய் என்றுமிக ஒற்றுமையாய்
பல்லாண்டு வாழ்ககம் பன் கழகம் - மல்லாண்ட
பன்னிருகை ஞான பரமன் திருவருளால்
இந்நிலத்தில் வாழ்க இனிது.

## திருக்குறள் தசாவதானி வெ. இராமையா

☞ சீர்சான்ற வாழியூர் செம்மைசேர் சான்றோர்கள்
பார்சான்ற நற்றமிழின் பாங்குணர்த்த - நேர்சான்ற
கம்பன் கழகம் கவினுறவே தானமைத்தார்
இம்பருளார் போற்ற இசைந்து.

☞ வாழியூர் கம்பன் கழகமிது மாண்புநிறை
ஊழியத்தால் மிக்க உயர்வெய்தி - ஆழிசூழ்
நல்லுலகில் வாழியவே நீடூழி நற்பணியால்
எல்லாச் சிறப்பும் இயைந்து.

## சிலம்பொலி சு. செல்லப்பனார்

☞ ஆழிசூழ் உலகொடு தோன்றிய தமிழை
வாழியூர் வாழும் கம்பன் கழகம்
வளர்ந்திட உழைத்து வருவதைக் கண்டு
உளத்திடை மிகவும் மகிழ்ச்சிகொள் கின்றேன்

## புரிசை பேராசிரியர் ச. அரங்கநாதனார்

☞ சீராரும் வாழியூர் செம்மையுறக் கம்பனின்
பேராரும் சங்கமதை பெற்றியுடன் - ஊராரும்
மற்றவரும் ஓங்குபுகழ் பெற்றிடவே நாட்டினார்
கற்வர்கள் போற்றிக் களிக்க

☞ என்னருமை நண்பராம் ஏற்றமிகு ராசவேலர்
நன்னயமாய் இக்கழகம் நாடோறும் - தென்னகத்தில்
சீருடனே தான்விளங்கச் செய்துவரும் தொண்டினைஇப்
பேருலகில் வாழ்த்துவோம் போற்றி.

## பேராசிரியர் சிவ. சிவராமலிங்கனார்

☞ கம்பன் கலைக்கழகம் காத்துவரும் நற்பணிகள்
உம்பரும் போற்றும் உயர்ச்சியன - செம்மை
மனம் கொண்டார் எல்லாரும் மாண்புடைய ராமன்
இனப்புகழே கற்பார் இனிது.

☞ வடார்க்காடு மாவட்ட வாழியூர் தன்னில்
விடாத முயற்சியுடன் மேலோர் - நடாத்துகின்ற
சீராரும் கம்பரது தெய்வவிழா ஓங்குகவே
பாரோடும் ஏத்தப் பணிந்து.

## கவிஞர் பாலசந்திரன் ஜேக்கப்

☞ வாழியூர் கம்பன் விழாக் குழுவை
வாழ்த்திப் பெருமகிழ்ச்சி கொள்கிறேன்
தாழ்த்தி என்சிரத்தைக் கம்பன்
தந்த காவியத்தைப் போற்றுகிறேன்.

## மரபுக் கவிஞர் வே. இரா. சிவஞானவள்ளல்

☞ உழவினில் சிறந்தும் உழைப்பினில் சிறந்தும்
விளங்கிடும் வாழியூர் இங்கே
கழனியில் சிறந்து கதிர்முதிர் நெல்போல்
கவிமணி குலுங்கிடம் மனத்தால்
அழகிய கம்பன் கழகமென் றொன்றை
அணிபெற நிறுவியே அன்பர்
வழக்கமாய் நடத்தும்வளவிழா இன்று
வாழ்த்தியே போற்றுவோம் நன்றி !



உ
சிவபெருமான் பேரருள்





☎ : 0452-4377116
4381005
செல் : 9842174746




தெற்காவணி மூல வீதி,
மதுரை - 625 001.

புனித மிக்க
## மதுரை ஆதீனம்
292 ஆவது குருமகாசன்னிதானம்
## ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத
## ஸ்ரீ ஞானசம்பந்த தேசிய பரமாசாரிய சுவாமிகள்
&
ஆதினகர்த்தர்

பரம்பரை அறங்காவலர்

**அருள்மிகு அக்னீசுவரசுவாமி**
**திருக்கோயில்,**
**கஞ்சனூர்,**
**தஞ்சை மாவட்டம்.**

**அருள்மிகு சாட்சிநாதசுவாமி**
**திருக்கோயில்**
**திருப்புறம்பியம்,**
**தஞ்சை மாவட்டம்.**

**அருள்மிகு**
**கைச்சின்னேசுவரசுவாமி**
**திருக்கோயில்,**

**தஞ்சை மாவட்டம்.**

**அருள்மிகு**
**பன்னகாபரமேசுவரசுவாமி**
**திருகோயில்,**
**பன்னத் தெரு,**
**தஞ்சை மாவட்டம்.**

**திரு. வே. இராஜவேலன்**
கம்பன் கழகம்,
வாழியூர் - 632 315.
திருவண்ணாமலை மாவட்டம்.

**ஆசீர்வாதம் !**

தங்கள் 01.09.2009 ஆம் நாளிட்ட மடல் கிடைத்து, மகிழ்ந்தோம் !

கம்பன் கழகத்தின் 31ஆம் ஆண்டு விழா, 2010 பிப்ரவரித் திங்களில் நடத்த உத்தேசித்திருப்பதை, அறிந்து கொண்டோம். விழா ஏற்பாடுகள், நடக்கட்டும், **மலர்** கம்பனின் பெருமைகளைப் பறை சாற்றட்டும் ! எல்லோர்க்கும் ஆசீர்வாதம் !

**ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்**

05.09.2009



பாலமுருகனடிமை

அருள்மிகு பாலமுருகன் திருக்கோவில்

இரத்தினகிரி, கீழ்மின்னல் - 632 517.

வேலூர் மாவட்டம், தமிழ்நாடு.

கோவில் : 04172-266350

அலுவலகம் : 266330

அன்புடையீர்,

நல்வாழ்த்துக்கள்.

மனிதர்கள் வையத்துள் வாழ்வாங்கு வாழ வேண்டுமென்ற நன்னோக்கில் மக்கள் பண்பு நலன்களில் மாண்புடன் விளங்கும் நடையில் நின்றுயர் இராமன் போன்ற காவிய மாந்தர்களாகவும், ஆகாப் பண்புகள் கொண்டால் எப்படி அகந்தையால் அழிய நேரிடும் என்பதை இராவணன் போன்ற காவிய படைப்புகளாலும் இராமாயணத்தைத் தந்து இறவாப் புகழ் கொண்டவர் கம்பர்.

கம்பர் "என்றுமுள தென்தமிழ் இயம்பி இசை கொண்டான்" என்று அகத்தியரைப் பற்றி பாடுவார். தான் பாடிய அத் தொடருக்குத் தானே முழுச் சான்றாக விளங்குகிற ஒருவன் கம்பராமாயணத்தைக் கற்கத் தொடங்கி விட்டால் அதிலேயே மூழ்கிப் போவான். மற்ற இலக்கியங்களின் பக்கம் போகவிடாமல் அது தடுத்துவிடும். அவ்வளவு கவிதை நயமும், கற்பனை வளமும், சிந்து சந்தமும், செந்தமிழ் செழிப்பும் கொண்டது என்று புலவர் பெருமக்கள் புகல்வர்.

இவ்வளவு பெருமைக்குரிய கம்பருக்கு ஒரு கழகம் தொடங்கி "கம்பன் புகழ்பாடி கன்னித் தமிழ் வளர்ப்போம்" என்ற சீரிய நோக்கோடு காரைக்குடியில் கம்பரடிப்பொடி சா. கணேசன் அவர்கள் செயல்பட்டு வந்தார். அவருக்குப் பிறகு அது செவ்வனே நடந்து வருகிறது. அவரைப் பின்பற்றி கம்பரின் அன்பர்கள் தமிழ் கூறும் நல்லுலகெல்லாம் கம்பர் கழகம் நிறுவி நடத்தி வருகிறார்கள். நகர்புறங்களில் நடந்து வரும் கழகங்கள் போல கிராமபுறத்திலும் நடத்திவர முடியும் என்று நிகழ்த்தி காட்டி வருபவர் கம்பர் சீர் பரவுவார் வாழியூர் வே. இராசவேலன் அவர்கள்.

வாழியூரில் கடந்த 30 ஆண்டுகளாக கம்பவாணர்களையும், இலக்கிய புலவர்களையும், மக்கள் தொண்டர்களையும் கொண்டு கம்பர் சீர் பரவுவதில் தான் எந்த வகையிலும் மற்றவர்களுக்கு இளைக்க வில்லை என்று மெய்ப்பித்து வருகிறார்.

இந்த ஆண்டு 31ஆம் ஆண்டு விழா நடத்துவதோடு, விழா மலரும் வெளியிடுகிறார். விழாவும் மலரும் எல்லா வகையிலும் செம்மையாக விளங்க இரத்தினகிரி இளவழகனை இறைஞ்சி வாழ்த்தி மகிழும்.

பாலமுருகனடிமை

"அறமும் மெய்மையும் வெல்லுதல் விழைவு"

**SWAMI SACHITHANANDA**
Sri Kamalakkanni Amman Devasthanam
Sri Maha Lakshmi Amman Devasthanam
Kalavai, Vellore Dist., Pin - 632 506.
Phone : 04173 - 242269

அன்புடையீர்,

அருளாசி ! தாங்கள் தொய்வின்றி தொடர்ந்து கம்பனுக்கு விழா எடுத்து சிறப்பு செய்வதை அறிந்து மிக்க மகிழ்ச்சி ! கம்பனை சிறப்பித்து விழா எடுப்பது என்றால் கன்னித் தமிழுக்கு விழா எடுப்பதற்கு ஒப்பாகும். கன்னித் தமிழும் கம்பனும் வேறில்லை. பெரு நகரங்களில் கம்பனுக்கு விழா எடுப்பது ஒன்றும் வியப்புக்குரிய செய்தியில்லை. தாங்கள் ஒரு சாதாரண குக்கிராமத்தில் கம்பனுக்கு விழா எடுத்து சான்றோர்களை எல்லாம் அழைத்து அவர்களையும் சிறப்பித்து விழா எடுப்பதை அறிந்து மனம் மகிழ்ச்சியால் நிறைந்து போகிறது.

தங்கள் தமிழ்த் தொண்டு தொடர எல்லாம் வல்ல அருள்மிகு கமலக்கன்னி அம்மன் பொற் கழல்களைப்பற்றி இறைஞ்சி வாழ்த்தும்

என்றும் தங்கள்பால் மிக்க
பிரியமுடன்
**சச்சிதானந்தா**
23.9.2009



# OM SAKTHI NARAYANI SIDDAR PEEDAM CHARITABLE TRUST

Regd. No. : 504/95

THIRUMALAKODI, Vellore - 632 055.

Vellore District, Tamil Nadu, India.



ஓம் நமோ நாராயணி

**அம்மாவின் ஆசிகள் !**

உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யானவன்
தலைவ ன்னனவர்க் கேசர ணாங்களே !

– கம்பன்

கம்பனின் இந்த இறைவணக்கப் பாடல் மூலமாக தெய்வம் என்றால் யார்? தெய்வத்தின் சேவைகள் என்னென்ன? என்பதை உலகம் அன்று முதல் இன்று வரை உணர்ந்து கொள்ள முயற்சித்து வருகிறது.

உலகமாகிய தொகுதியை உருவாக்கியும். உருவாக்கியவற்றிற்கு எக்காலம் என்னென்ன தேவையோ அக்காலம் அவற்றையெல்லாம் வழங்கியும் பின்னர் உயிர்கள் இளைப்பாறும் பொருட்டு மரணமென்ற மாபெரும் பரிசை அளித்தும் இப்படி, தெய்வமானது முத்தொழிலிலும் நீங்காது நிற்பதையும். தெய்வம் ஒன்றே என்பதையும் தெளிவாக்கியுள்ளார் கம்பர்.

இப்படி அளப்பதற்கரிய திருவிளையாடல்களைப் புரிகின்ற தெய்வத்திடம் யான் சரணடைகின்றேன் என்ற கம்பனின் அரிய சிந்தனையை அனைவரும் பின்பற்றினால் வாழ்வின் துன்பங்கள் பற்றிய கவலையில்லாமலும். மரணத்தைப் பற்றிய பயமில்லாமலும் உயிர்கள் வாழலாம்.

சரணாகதி என்பதே உயர்ந்த நிலை ! கடைசி நிலை ! நல்லவோர் மனிதனிடம் சரணடைகின்ற உயிர்கள் பாதுகாக்கப்படுகின்றன. இதை இவ்வுலகில் அனைவரும் காண்கிறோம். மனிதனிடம் சரணடைகின்ற உயிர்களுக்கே இந்த நல்ல நிலை என்றால், மனிதனை உருவாக்கிய ; கருணையே வடிவமான அந்த தெய்வத்திடம் சரணடைந்தால் இன்னும் என்னென்ன பேறு உயிர்களுக்குக் கிட்டும் என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும். தெய்வத்ததைவிட உயர்ந்த பொருள் வேறெதும் கிடையாது. முதலும் அதுவே ! முடிவும் அதுவே ! இப்படி முதலாகவும், முடிவாகவும் என்றென்றும் நிலையாகவும் வாய்க்கப்பட்டிருக்கும் தெய்வத்திடம்

Phone : 0416 - 2271202, 2271844, 2271584 Fax : 0416 - 2271777
E-mail : amma1976@md5.vsnl,net.in, Website : www.narayaniamma.org

சரணடையாத உயிர்களெல்லாம் ஆசை, கோபம், காமம் என்ற முப்பெரும் மாயைகளிடம் சிக்கிச் சுழன்று அல்லல்பட்டு அதுவே பிறவிக்குரிய வித்தாகி மாறி மாறி பிறவிகளில் விழுந்து அல்லல்படுகின்றன. இந்நிலை மாற வேண்டுமென்றால் தெய்வத்திடம் கம்பன் சொன்னதுபோல சரணடைய வேண்டும். இந்தச் சரணாகதியொன்றே துன்பங்களைப் போக்கி ஆனந்தத்தை அள்ளித்தருவது.

வாழ்க்கையில் எல்லாம் கிட்டும். ஆனால் பலபேருக்கு அமைதி கிட்டாது. அமைதியைத் தேடித்தேடி அலுத்துப் போகும் மனித உயிர்கள் ஏராளம். அந்த அமைதிமட்டும் கிட்டினால் அதுவே ஆனந்தம். ஆனந்தம் என்பது வேறொன்றும் இல்லை. மன அமைதியே ! சலனமற்ற அமைதியொன்றே ஆனந்தம் ! அதுதான் இயற்கை ! அதுவே தெய்வாம்சம்! சலனமற்ற பொருளில் இருந்து உற்பத்தியான சலனமே வடிவான உயிர்கள் கடைசியில் சலனமற்ற பொருளிலேயே ஐக்கியமாகிவிடுகிறது. இதுவே உயிர் தத்துவம்.

காண்பதற்கரிய தெய்வத்திடம் சரணடைவது ஒருவழி, மற்றொன்று கண்களால் காணக்கூடிய தெய்வ அவதாரங்களிடம் சரணடைவது என்பது மற்றொரு வழி, உலகில் பல்வேறு தெய்வ அவதாரங்கள் மனித வடிவிலே தோன்றி நல்ல காரியங்களை உயிர்களுக்கு ஆற்றியும். ஞான உபதசங்கள் செய்தும் நல்வழியில் உலகைக் கொண்டு சென்று தொண்டாற்றுவதே நன்மக்கள் பல்லோரும் அறிவர்.

அவ்வகையிலே தமிழ்நாட்டின்கண் வேலூர் திருமலைக்கோடியில் ஸ்ரீ நாராயணியென்றும், ஸ்ரீ சக்தி அம்மாவென்றும் இருவேறு நாமங்களைத் தாங்கிய தெய்வ அம்சம் ; தெய்வ அவதாரம் உலகிற்கெல்லாம் தாயாகி வழி நடத்தி வருவது பல்லோர் அறிந்ததே. கம்பன் பாடியதைப் போல கண்கூடான தெய்வ அவதாரத் தாயின் திருவடிகளில் அனைவரும் சரண்புகுந்து வாழ்வை ஆனந்தமயமாக்கிக் கொள்ள வேண்டும்.

மேலும் 30 ஆண்டுகளாக வாழியூர் என்னும் சிற்றூரில் கம்பனின் புகழையும், அவர் பாடிய இராமாயணத்தையும் போற்றி வளர்த்து இன்று 31ஆம் ஆண்டிற்குள் அடிவைத்திருக்கின்ற இந்த அன்பரின் சேவைகள் வாழ்த்துதலுக்கு உரியதே. மேலும் மேலும் இவ்வன்பரின் இலக்கியச் சேவைகள் பெருகிவர ஆசிர்திக்கின்றோம்.

– அம்மா

# வாழ்த்துரை

கலைமாமணி ஏர்வாடி

**எஸ். இராதாகிருஷ்ணன்**

420இ, மலர் காலனி, அண்ணா நகர் மேற்கு, சென்னை – 600 040. தொலைபேசி : 2618 6464

கம்ப இராமாயணம் ஒரு காவியம் மட்டுமன்று. வாழ வகையறிவிக்கும் வழிகாட்டி. எப்படி வாழ வேண்டும் என்பதை இராமபிரான் மூலமும் என்ன திறனிருந்தும் எது ஆகாதென்று இராவணன் மூலமும் அன்பு, நட்பு, மனிதநேயம் போன்ற பல்வேறு பண்பு நலன்களைப் பாத்திரங்ள் பலவற்றின் மூலமும் புலப்படுத்துகிற இப்பைந்தமிழ்க் காப்பியத்தில் தமிழின் இனிமையும், கவிதையின் சுவையும் கூடுதல் உள்ளடக்கம்.

மானுட மேன்மை பாடும் இக்காப்பியச் சிறப்பை கம்பன் கழகங்கள் பல்வேறு விழாக்கள், வெளியீடுகள், கருத்தரங்குகள் வாயிலாய் பைந்தமிழர் செவிதோறும் செழுந்தேனாய் வார்த்துச் சுவையுணரச் செய்யும் சிறந்த தொண்டாற்றி வருகின்றன. 1979 முதல் இன்றளவும் தொடர்ந்து தொய்விலாது சிறந்த கம்பன் தொண்டு செய்து வரும் வாழியூராரைப் பாராட்ட வார்த்தைகளே இல்லை.

நெஞ்சம் நிறைய வாழ்த்துகிறேன். நல்ல தமிழ்த் தொண்டு நாளும் புரிவோர் நீடு வாழ வேண்டும். அமைப்போடு அவர்களும் அவர்களோடு அமைப்பும் சிறந்தோங்கி வளர என் சிந்தை நிறைந்த வாழ்த்துக்கள்.

அன்புடன்

**ஏர்வாடி. எஸ். இராதாகிருஷ்ணன்**

# மலர்க்காவில் நுழையும் முன்

பேரன்புடையீர், வணக்கம் !

நேற்று ஆரம்பித்ததுபோல் இருக்கிறது 31 ஆண்டுகள் ஓடிவிட்டன. பேராசிரியர் புரிசை ச. அரங்கநாதன் அவர்கள் இக்கழகத்தை ஆரம்பித்து வைத்தார். 4 முதல் 9 ஆண்டு வரை சிறியதாகக் கவிதை மலர் வெளியீட்டோம். அடுத்து வெள்ளி விழா மலர் வெளியிட்டோம். 31ஆம் ஆண்டு கம்பன் விழா மலர் தங்கள் கைகளில் தவழ்கிறது.

இம்மலருக்கு வாழ்த்துரை வழங்கிய குன்றக்குடி ஆதினம், மதுரை ஆதீனம், தவத்திரு பாலமுருகனடிமை, தவத்திரு சச்சிதானந்தா சுவாமிகள், ஸ்ரீ நாராயணி பீடம் அம்மா, கவிமாமணி ஏர்வாடி இராதாகிருஷ்ணன் ஆகியோருக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கட்டுரைகள் கவிதைகள் அனுப்பி வைத்த சான்றோர் பெருமக்களுக்கு எங்களது நன்றி.

கடிகம் மூலமும், நேரில் வேண்டுகோள்விடுத்தும் அவ்வேண்டுகோளுக்கு மதிப்பு அளித்து விளம்பரங்கள் அனுப்பி வைத்த அனைவருக்கும் நன்றி !

மற்றும் ஆசிரியர் குறளியம், காஞ்சி திரு.மா. வரதராசன் ஆகியோருக்கும் நன்றி !

மலர்வெளிவரக் காரணமாயிருந்த வேலூர் இந்தியன் கிராபிக்ஸ் உரிமையாளர் திரு. சிவகுமார் அவர்களுக்கும், கண்ணமங்கலம் ரமேஷ் ஆப்செட் பிரிண்டர்ஸ் உரிமையாளர் தம்பி ரமேசுக்கும் நன்றி

இம்மலரைப் பற்றி குறை, நிறைகளை எழுதுங்கள்

அன்புடன்,
மலர்க்குழுவினர்

# ஒரு சடையும் திரி சடையும்

**சொல்லின் செல்வர். ரா.பி. சேதுப்பிள்ளை**

கார்மேகத்தின் இடையே இலங்கும் கதிரொளி போல இரக்கம் அற்ற அரக்கர் வாழ்ந்த இலங்கைமா நகரத்தில் திரிசடை என்னும் நல்லாள் தோன்றினாள். இம்மங்கை தன் தந்தையாய விபீஷணனது அறிவும் தகைமையும் இனிது அமையப்பெற்று விளங்கினாள். மதுவுண்டு மயங்கிய இலங்கைமா நகரில் அம்மதுவைக் கண்ணெடுத்தும் பாராத கன்னியாய் அமைந்தாள். ஊனைத்தின்று ஊனைப் பெருக்கும் அரக்கர் நிறைந்த அந்நகரத்தில் புலால் உணவை அறவே ஒழித்த புனித நங்கையாய் இலங்கினாள். இம்மங்கை வாழ்ந்த மனையின் தன்மையைத் தன் மெய்யுணர் கண்களால் கண்ட மாருதி,

*நிந்தனை நறவமும் நெறியில் ஊன்களும்*

*தந்தன கண்டிலென் தரும தானமும்*

*வந்தனை நீதியும் பிறவும் மாண்பமைந்து*

*அந்தணர் இல்லெனப் பொலிந்த தாமரோ*

என்று போற்றிப் புகழ்ந்தான். இத்தகைய நல்லொழுக்கம் வாய்ந்த நல்லாள் அழகிலும் சிறந்து நாளொருமேனியாய் வளர்ந்து வந்தாள்.

இலங்கைவேந்தன் சீதையாகிய திருமகளை வஞ்சனையால் கவர்ந்து, அசோகவன மென்னும் அழகிய வனத்தில் சிறை வைத்தான். அகன்ற கடலும் உயர்ந்த மதிலும் சீதையின் சிறைகாப்பதற்குப் போதா வென்றெண்ணிப் பல்லாயிரம் அரக்கியரை அவ்வனத்தில் காவலாய் அமைத்தான் அக்கருமனத்தரக்கியர் இடையே, புலிக்குழாத்தினடுவே அகப்பட்ட புல்வாய்போலச் சீதை மயங்கினாள். இவ்வரக்கியர் இலங்கைவேந்தன் ஏவலால் இரவும் பகலும் சீதையை இறவாது காத்துவந்தார்கள். கறுத்துப் பருத்த மேனியும் வளைந்து இதழ் அதுக்கும் எயிறுகளும் உடைய அரக்கியரைக் கண்டு சீதை அஞ்சி நடுங்கினாள். இடிமுழக்கம் போன்ற அவரது குரலைக்கேட்டு ஏக்கமுற்று வாடினாள். தலைவனைப் பிரிந்து அருந்துயரில் ஆழ்ந்த திருமகள் அரக்கியரது கொடுமையால் ஆற்றொணாத் துயரடைந்து வெந்த மண்ணில் வேல் எறிந்தாற்போல வெய்துயிர்த்தாள்.

இத்தகைய துன்பத்தால் நலிந்த மங்கைக்குத் திரிசடை உயிர்த்தோழியாய் அமைந்தாள். சீதையை மனச்சிறையில் அமைத்த

இலங்கை மன்னன், தான் காதலித்த மங்கையின் மென்மைக்கும் செம்மைக்கும் ஏற்ற முறையில் நல்லியர் வாய்ந்த ஒரு தோழியைத் துணையாக அமைக்கக் கருதி அப்பணியைத் திரிசடைக்கு அளித்தான். நற்குணங்களெல்லாம் ஒருங்கே அமைந்த சீதையிடம் இந்நல்லாள் தலையாய நேசம் பூண்டு ஒழுகினாள். நாதனைப் பிரிந்த நங்கைக்கு நல்ல உயிர்த்துணையாய் அமைந்தாள். தலைவனை நினைந்து தளரும் தலைமகளுக்கு அப்பெருமான் வருவது திண்ணமென்று ஆறுதல் கூறி அவர் ஆருயிர்காத்தாள். சீதை வருந்தும்போது தானும் வருந்துவாள். அரக்கனது கொடுமையை எண்ணிச் சீதை நடுங்கும்போது நல்லுரைகளால் தேற்றுவாள். கணவனைப் பிரிந்த துயரத்தால் கண்ணிமையாத தலைமகளோடு, தானும் துயிலாது கண் விழித்திருப்பாள். இத்தகைய தோழியைத் திருமகள் தன் அன்னையாகவே கருதி அவள்பால் தலையாய அன்பு செலுத்தினாள். நேசம் என்னும் பாசத்தால் பிணிப்புற்ற இருவரும் ஒருவருக்கொருவர் அருந்துணையாயினர். மையல் நோயால் நையலுற்ற இலங்கைநாதன் தன் கற்பினுக்கு ஏதம் செய்வானோ என்று அஞ்சி அயர்ந்த சீதையின் மயக்கம் தீர்க்குமாறு திரிசடை மலரோனது சாபவலிமையை எடுத்துரைத்தாள். முறையாக மணம்புரிந்த மங்கையரை அன்றி, மற்றைய மாதரை இலங்கை வேந்தன் தீண்டுவானாயின், அவன் தலை வெடிக்கும் என்ற முன்னமே அயன் அருளிய சாபத்தைத் திரிசடை நன்றாய் அறிந்திருந்தாள். அச்சாபத்தின் வரலாற்றையும், வலிமையையும் சீதையிடம் எடுத்துரைத்து அம்மங்கையின் மனத்துயரை மாற்றினாள். இத்தகைய சாபத்திற்கு அஞ்சியே, அரக்கன் தன்மெய் தொடாது தானிருந்த நிலத்தை அகழ்ந்தெடுத்து அசோக வனத்தில் வைத்தான் என்னும் உண்மையைச் சீதை அறிந்து மகிழ்ந்தாள்.

தலைவன் வரும் அளவும் தன் கற்பினுக்கு யாதும் இழுக்குநேராது என்று அறிந்த நங்கை மயக்கந்தீர்ந்து மனத்திண்மை பெற்றாள். இவ்வாறு தனக்கு உயிர் அளித்த தோழியின் கருணையைச் சீதை மாருதியிடம் மனமாரப் புகழ்ந்தாள்.

*அன்ன சாபம் உளதென ஆண்மையான்*
*மின்னு மௌலியன் மெய்ம்மையன் வீடணன்*
*கன்னி என்வயின் வைத்த கருணையால்*
*சொன்ன துண்டு துனுக்க மகற்றுவாள்.*

என்று தோழி தன்பால் வைத்த இரக்கத்தைச் சீதை வாயாரப் புகழ்ந்து போற்றினாள்.

*காலத்தினால் செய்த நன்றி சிறிதெனினும்*

*ஞாலத்தின் மாணப் பெரிது.*

என்று வள்ளுவர் உரைத்த உண்மைக்குத் திரிசடையே தலைசிறந்த சான்றாய் அமைந்தாள். சஞ்சலத்தால் நைந்த சீதையின் நெஞ்சைத்தேற்றி அம்மங்கைக்கு உயிரளித்த பெருமை திரிசடைக்கே உரியதென்னும் உண்மையை அறிந்த அனுமன் ஐயம் துறந்து ஆனந்தமுற்றான்.

இன்பமும் துன்பமும் கலந்த இவ்வுலக வாழ்க்கையில் துன்பம் உறவினருடன் பேசுந்தொறும் குறையும் என்றும் இன்பம் அவ்வாறு பேசுந்தொறும் நிறையுமென்றும் அறிந்தோர் கூறுவர். ஆகவே துன்பத்தை குறைத்தற்குத் துணைவர் வேண்டும் என்றும், எவரிடமும் எடுத்துரையாது மனத்தகத்தே அடைத்த துன்பம் இதயத்தைப் பிளக்கும் இயல் அமைந்த தென்றும் கற்றிந்தோர் கூறுகின்றார்கள். பொறுக்கலாற்றாத பெருந்துயர் அடைந்த சீதை அத்துயரத்தைத் தன் தோழியிடம் சொல்லி ஆற்றிய தன்மையாலேயே ஆவி தங்கியிருந்தாள் என்பது இனிது அறியப்படும். இரவும் பகலும் இராமனையே எண்ணி ஏங்கிய சீதை ஒரு நாள் சிலமெய்க்குறிகள் கண்டு மயங்கினாள். தனது இடக்கண்ணும் தோளும் புருவமும் துடிக்கக்கண்ட திருமகள் தலைவனுக்கு என்ன நேருமோ என்றஞ்சி அன்னைபோல் விளங்கிய தோழியை அன்போடு நோக்கி அம்மையே ! முன்னாள் முனிவரோடும் தம்பியோடும் என் காதலன் மிதிலைமா நகரில் வந்தபோது எனது இடப்புருவமும் தோளும் கண்ணும் துடித்தன ; அப்பால் என் ஆவி நாயகன், நாடுதுறந்து காடு புகுந்த நாளில், எனது வலக்கண்ணும், தோளும் புருவமும் துடித்தன ; இன்னும் நஞ்சனைய இலங்கை அரக்கன் என்னை வஞ்சனையால் கவர்ந்த நாளில் அவ்வாறே வலம் துடித்தது ; இப்போது வலப்புறம் துடியாது, இடப்புறம் துடிக்கின்றது ; இதனால் என்ன நேருமோ என்று அஞ்சுகின்றேன்; இதன் உண்மையை ஆராய்ந்து சொல்வாய் என்று வினயமாய் வினவினாள். திருமகள் கூறிய சொற்களை அமையக்கேட்ட தோழி அகமகிழ்ந்து, அருமருந்தே ! உன் அருமை நாயகன், இங்கு விரைவில் வருவான் என்பதை இக்குறிகள் அறிவிக்கின்றன. நான் கண்ட கனவும் உனக்கு நற்காலம் விரைவில் வருமென்று நன்குணர்த்துகின்றது. எந்நாளும் துயிலுறாத நான் நேற்றுச் சிறிது கண் அயர்ந்திருக்கையில் ஒரு கனவு கண்டேன்.

இலங்கைவேந்தன் சிவந்த ஆடையணிந்து தலையில் எண்ணெய் பூசி, பேய் பூண்ட தேர்மேலேறி, தென் திசை நோக்கிச்சென்றான். அவ்வேந்தனது மக்களும் சுற்றமும், மற்றைய அரக்கரும் அவ்வாறே தென்திசை நோக்கிச் சென்றார்கள். அரக்கர் கோன் ஆதரித்து வளர்த்த அசோகவனம் அழகிழந்து அழிந்தது. பொன்கொண்டிழைத்து மணியைக் கொடு பொதிந்த மன்னன் மாளிகை இடியுண்டு பொடியாய் விழுந்தது. பிடிகள் மதம் பொழிந்தன. பேரிகைகள் அடிப்பாரின்றியே இடிபோல் முழங்கின. கருமேகங்கள் வெடிபட அதிர்ந்தன. விண்மீன்கள் உதிர்ந்தன. ஆதவன் பிளந்து எரிந்தான். கல்னெத் திரண்ட இலங்கை வீரரது புயங்களில் விளங்கிய கற்பக மாலை நறுமணங்கமழாது புலால் நாற்றம் கான்றது. இலங்கைமா நகரம் எரிந்தது. வாடா விளக்குகள் அவிந்து அந்தகாரத்தில் ஆழந்தன. தோரண கம்பங்கள் ஒடிந்தன. பூரணகும்பங்கள் மதுக்குடம்போல் பொங்கின. வேழங்களின் வலிய கொம்புகள் முறிந்து விழுந்தன. மதியினைப்பிளந்து மின்னொளி யெழுந்தது. கடுமேகங்கள் குருதிமழை பொழிந்தன. அரக்க மங்கையரது மங்கலநாண் அற்று விழுந்தது. மயன் மகளாய மண்டோ தரியின் அழகிய கூந்தல் அவிழ்ந்து, அருகேயிருந்த விளக்கில் வீழ்ந்து எரிந்து கருகிற்று, புலிக்குழாத்தின் நடுவே வந்த இரண்டரிகள் இலங்கையின் மதக்கரிகளை வளைந்து போர் செய்து கொன்றன. இந்நகரினின்றும் ஒர் அழகிய மயில் வெளியே சென்றது. ஒளியமைந்த ஓர் திருமகள் கையில் மணிவிளக்கேந்தி, இலங்கைநாதன் மாளிகையினின்றும் போந்து என் தந்தையின் மாளிகை புகுந்தாள். அந்நிலையில் என்னை நீ எழுப்பி விட்டாய் என்று தான் கண்ட கனவை விரிவாக எடுத்துரைத்து வணங்கி நின்றாள்.

இவ்வாறு கண்ட கனவினால் இலங்கை மாநகரம் அழியும் என்றும், அரக்ரெல்லாம் இறந்தொழிவர் என்றும் சீதை சிறையினின்றும் நீங்குவாள் என்றும் திரிசடையின் தந்தை இலங்கைக்கு மன்னன் ஆவான் என்றும் அறிந்து இருவரும் மனமகிழ்ந்தார்கள். அரக்கியரது கொடுமையால் ஆற்றொணாத்துயர் அடைந்த மங்கைக்கு இக்கனவே அருமருந்தாய் அமைந்தது. நாயகனைக் காணலாமென்னும் காதலால் நங்கை அரக்கரது புன்மையெலாம் பொறுத்து ஆவிகாத்து அமைந்தாள்

திருமகளைத் தன் தீயகருத்துக்கு இசைவிக்கக் கருதிய இலங்கை வேந்தன் நயத்தால் தன் கருத்து முற்றுப்பெற தென்றறிந்து பயத்தால்

அம்மங்கையை இசைவிக்க எண்ணினன் தனக்கிசைந்த மாற்றம் உரையாத மங்கையை நோக்கி

*பள்ள நீரயோத்தி நண்ணிப்பரதனே முதலினோர் ஆண்டு*
*உள்ளவர் தம்மை யெல்லா முயிர்குடித்தூழித் தீமின்*
*வெள்ளநீர் மிதிலையோரை வேரறுத்து எளிதினெய்திக்*
*கொள்வென் நின்னுயிரும் என்னை யறிந்திலை குறைந்த நாளோய்*

என்று இலங்கைவேந்தன் பயமுறுத்திச் சென்றான்.

அயோத்திமா நகரில் அருந்தவம் புரிந்த பரதனையும் மிதிலைமா நகரில் அரசுபுரிந்த மன்னனையும் மற்றைய . சுற்றத்தையும் வேரறுப்பதாக வஞ்சினம் கூறிச்சென்ற மன்னவன் மாயையால் ஒர் அரக்கனை மிதிலை அரசன் போல் ஆக்கி அவனைப் பாசத்தால் பிணித்துச் சீதையின் கண்ணெதிரே கொண்டு வருமாறு ஆணையிட்டான். அரக்கனது மாயத்தை அறியாத சீதை மாயத் தந்தையை உண்மைத் தந்தை என்றெண்ணி, மயங்கி அழுதாள். கைகளை நெரித்தாள் கண்ணை மோதினாள் நெருப்பில் விழுந்த மலர்போல் வாடினாள் ஏங்கினாள் நடுங்கினாள் 'ஐயோ தந்தாய் என்னால் உனக்கும் இத்துன்பம் வந்ததோ! மன்னர் மன்னரால் மதிக்கப்பெற்ற நீ அரக்கனது பாசத்திலகப்பட்டு மானமிழந்து உயிர்வாழ்தல் முறையோ! பெண்ணைப் பெற்ற பெரும் பாவத்தால் இப்பழியைப் பெற்றாய். நம்மிருவரையும் சிறை நீக்குவார் எவரையும் காண்கிலேனே!' என்று மயங்கி அழுதாள். இவ்வாறு தன் தந்தையின் துயரைக்கண்டும் மனம் திரியாத சீதையின் திண்மையைக் கண்டு, அம்மாய மன்னனைச் சிறைவைக்குமாறு அரக்கர்கோன் பணித்தான். தன் தந்தையென வந்த மாயோன் மறைந்தபின்னர், சீதை அருந்துயரில் ஆழ்ந்தாள். தந்தைக்கு நேர்ந்த மானத்தை எண்ணி மனங்குழைந்தாள். தலைவனும் தந்தையும் தன்னால் அடைந்த பகையையும் பழியையும் நினைந்து நைந்தாள். அந்நிலையில் திரிசடை, திருமகளை அருளொடு நோக்கி இசையினுமினிய சொல்லால், 'அன்னமே, உன்னெதிரே சற்றுமுன்வந்தவன் உன் தந்தை அல்லன்: இங்குள்ள அரக்கர் எல்லாம் மாயையில் மிகவல்லோர், அவ்வரக்கரில் ஒருவனாகிய மருத்தன் என்பவனே மாயையால் உருவம் மாற்றி மிதிலை மன்னனாக வந்தான் ஆதலால் உன் தந்தை மானமழிந்தான் என்று மனம் வருந்தாதே' என்று மயக்கம் தெளிவித்தாள். இதனை

*உந்தையென்று உனக்கெதிர் உருவ மாற்றியே*
*வந்தவன் மருத்தனென் றுளன் ஓர் மாயையான்*
*அந்தமில் கொடுந்தொழில் அரக்க னமெனச்*
*சிந்தையில் உணர்த்தினன் அமுதின் செம்மையாள்.*

என்று கம்பர் அழகாகக் கூறியுள்ளார். இவ்வாறு திரிசடை கூறிய சொற்களால் மனந்தேறி, மங்கை ஒருவாறு துயரம் தீர்ந்தாள்.

இவ்வாறிருக்கையில், இலங்கை வேந்தனது சேனைக்கும் இராம வீரனது சேனைக்கும், இலங்கைமாநகரில் கடும்போர் நிகழ்ந்தது.. இலங்கை மன்னன் மகனாய மேகநாதன், வீரத்திலும் வரத்திலும் தலைசிறந்து விளங்கினான். தனது அரிய படைக்கலங்களைக் கொண்டு பகைவரோடு போர் செய்யப்போந்த மேகநாதன், மாயையால் விண்ணில் மறைந்துநின்று வெம்மையும் கொடுமையும் நிறைந்த மலரோன் படையை மாற்றர் மீது ஏவினான். அப்படைவலியால் இலக்குவன் முதலிய எல்லா வீரரும் நலிந்து மாய்ந்து மண்மேல் வீழ்ந்தார்கள். வீரர் அனைவரும், மடிந்து கிடப்பதைக்கண்ட இராமனும், மனங்கலங்கி மயங்கி மண்மேல் விழுந்தான். பகைவர் எல்லாம் தன் படைக்கலத்தால் பாழாயினர் என்று அறிந்து மகிழ்ந்த மேகநாதன், நிகழ்ந்த செயல்களை இலங்கை வேந்தனிடம் சென்று எடுத்துரைத்தான், அப்போது மன்னனும் மனம் மிக மகிழ்ந்து மதுக்கடலை மாந்திக் களித்து எல்லையற்ற இன்பமுற்றான். அமர்க்களத்தில் இறந்துகிடந்த இராமனைச் சீதை தன் கண்களால் காணின் இனி உய்யும் வழி இல்லை யென்றறிந்து தன்னைக் கணவனாக ஏற்றுக்கொள்வாள். என்று எண்ணிய இலங்கை வேந்தன், அத்திருமகளை அழைத்துக்கொண்டு அமர்க்களத்தைக் காட்டுமாறு அரக்கியருக்கு ஆணைசெய்தான். அவ்வாறே, சீதையை ஓர் விமானத்திலேற்றி இராமன் மயங்கிக் கிடந்த இடத்திற்கு இரக்கமற்ற அரக்கியர் கொண்டு சென்றார்கள். அப்போது திரிசடையும் திருமகளுடன் விமானத்தில் சென்றாள். மயங்கிக்கிடந்த நாயகனையும் மற்றைய வீரரையும் கண்ட சீதை, அனைவரும் இறந்தார் என்று எண்ணி நஞ்சுண்டவள் போல் நடுங்கி அழுதாள். கல்லும் கரைந்து உருகுமாறு திருமகள் அழுதபோது

*மங்கையழலும் வானாட்டு மயில்கள் அழுதார், மழவிடையோன்*
*பங்கிலுறையுங் குயிலழுதாள், பதுமமலர் மேன் மாதழுதாள்,*
*கங்கையழுதாள் நாமடந்தை யழுதாள், கமலத்தடங்கண்ணன்*
*தங்கையழுதாள் இரங்காத அரக்கிமாருந் தளர்ந்தழுதார்.*

என்று கவி கூறுமாறு விண்ணுலக மாதரும் மண்ணுலக மாதரும் மயங்கி அழுதார்கள். தலைவன் இறந்தபின் உயிர் வாழ இசையாத சீதை அந்நிலையே நாயகன் மீது விழுந்து ஆவிநீக்கத் துணிந்தெழுந்தாள். அப்போது அருகே நின்ற திரிசடை அம்மங்கையைத் தழுவிப்பற்றி, மற்றைய அரக்கியரை எல்லாம் விலக்கி, அருந்துயரில் ஆழ்ந்த திருமகளை நோக்கி 'அம்மா, இதுவும், அரக்கரது மாயமென்றறிவாய். முன்னே மாயமான் விடுத்ததுவும், மிதிலை மன்னனை வகுத்ததுவும், மாயம் என்று அறிந்தாய் அல்லவோ!'

*மாயமான் விடுத்தவாறும் ஜனகனை வகுத்தவாறும்*

*போயமா நாகபாசம் பிணித்தது போனவாறும்*

*நீயமா நினைவாய்மாள நினைதியோ நெறியிலாரால்*

*ஆயமா மாயம் ஒன்றும் அறிந்திலை அன்னமன்னாய்*

'இன்னும் நாம் கண்ட கனவும், நன்னிமித்தமும் பழுதாகுமோ? அறம் வெல்லும், பாவம் தோற்கும், என்னும் உண்மை பொய்க்குமோ? அண்டர் நாயகனான இராமனது வீரத்தன்னையை அயர்க்கலாமோ? அழியாப் பொருளாய் அப்பெருமானுக்கும் அழிவு நேருமோ?

வீரன் இறப்பானாயின் அண்டகோளம்பிளக்கும் அன்றோ? ஆதவனும் நிலைகுலையுமன்றோ? அயனது படையின் வலிமையால் வீரர் அனைவரும் மயங்கினரேயல்லால் மாண்டாரல்லர். இம்மயக்கம் தீர்ந்து இன்னும் இறைப்பொழுதில் எழுவார்கள். ஆதலால் மனம் வருந்தாதே' என்று திருமகளைத் தேற்றினாள்.அப்பொழுது சீதையும் சிறிது சிந்தித்து, அன்பு நிறைந்த தோழியை நோக்கி.

*'அன்னை நீ உரைத்ததொன்றும் அழிந்திதைாதனானே*

*உன்னையே தெய்வமாக்கொண்டு இத்தனை காலம் உய்ந்தேன்*

*இன்னம் இவ்விரவு முற்றுமிருக்கின்றேன் இறத்தல் என்பால்*

*முன்னமே முடிந்த தன்றே என்றனள் முளரிநீத்தாள்.*

'அன்னையே! இது காறும் நீ சொல்லியவெல்லாம் பொய்யாது சொல்லியவாறே நிகழ்ந்திருக்கின்றன. ஆதலால் உன்னையே தெய்வமாகக்கொண்டு என் நாயகனைப் பிரிந்த இத்தனைகாலமும் வாழ்ந்து வந்தேன். இன்னும் உனது உறுதிமொழியை நம்பி இவ்விரவுமுற்றும் உயிர் தாங்கி இருக்கின்றேன்' என்று சோகம் நிறைந்த சொற்களால் மாற்றம் உரைத்தாள். அந்நிலையில் சோகத்தாளாய

சீதையை மீண்டும் விமானம் ஏற்றி அசோகவனத்திற் கொண்டு சேர்த்தார்கள்.

அப்பால் அநுமன் மருத்துமாமலை எடுத்து வந்த போது மறையோன் படையால் மயங்கிய வீரர் எல்லாம் முன் போல எழுந்து ஆரவாரித்தனர். அப்பேரொலியைக் கேட்ட போது கதிர்வன் வரவு கண்ட தாமரைபோன்று திருமகள் அகமும் முகமும் மலர்ந்தாள். பகைவரெல்லாம் சிதைந்து ஒழித்தனர் என்று செம்மாந்து மதுவும் மதுரகீதமும் மாந்தி மயங்கிய இலங்கை மன்னனும் மற்றைய அரக்கரும் காலைக்குமுதம் போன்று கூம்பினார்கள்.

*ஆடலும் களிமின்வந்த அமலையும் அமிழ்தின் ஆன்ற*
*பாடலும் முழவின்தெய்வப் பாணியும் பவளவாயார்*
*ஊடலும் கடைக்கண்நோக்கும் மழலை வெவ்வுரையுமெல்லாம்*
*வாடன் மென்மலரே ஒத்த ஆர்ப்பொலி வருதலோடும்*

என்று கவி கூறுமாறு அரக்கரது ஆர்ப்பவிந்து ஒழிந்தது.முன்போலவே இப்பொழுதும் கன்னியின் சொல் அழியாமைகண்டு சீதை மனங்களித்து நாயகனைக்காணலாம் என்னும் காதலால் ஆவிகாத்து அமைந்தாள். இவ்வாறு தனக்குத் தோழியாயமைந்த கன்னியை அன்னையாகவும், காக்கும் தெய்வமாகவும் கொண்டு சீதை புனையா ஒவியம் போல் இலங்கையில் உயிர் வாழ்ந்தாள்.

இலங்கைபடபோரில் அளவிறந்த அரக்கரும் மேகநாதனும் இராவணனும் மடிந்தபின்னர் சீதையைச் சிறையினின்றும் அழைத்துவருமாறு இராமன் அனுமனை அனுப்பினான். சீதை செந்தீயின் மூழ்கித் தன் மாசற்ற கற்பின் பெருமையை உலகெல்லாம் அறியுமாறு விளக்கி, அஞ்சன வண்ணனாதியதன் ஆருயிர் நாயகனோடு அயோத்திமாநகரம் போகப் புறப்பட்டபோது இலங்கைக் கன்னியாய தோழியை இனிது நோக்கி, 'அன்னையே! இந்நகரில் இணையற்ற அணங்காக என்றும் வாழ்வாயாக' என்று மையறு மனத்தால் வாழ்த்திப் பிரியாவிடை பெற்றுப் போயினாள்.

செல்வத்தால் இலங்கிய இலங்கைமாநகரில் தந்தையாய விபீட ணன் மன்னனாய் விளங்கக் கனிந்த மனமுடைய கன்னி, செந்தாமரைச் செல்வியாய சீதையைச் சிந்தையில் அமைத்து ஒரு சடையாய்த் தவம் செய்த திருமகளைக்காத்த திரிசடை என்று உலகோர் போற்ற இலங்கையணங்காக இனிது வாழ்ந்தாள்.

# கம்பனில் - அசதி ஆடல்

கோ. செல்வம்,
(சென்னை வானொலி முன்னாள் இயக்குநர்)

அசதியாடல் என்பது இருவர் உரையாடுகையில் நம்பிக்கை இழந்தவரிடம் எதிர்மறைப் பேச்சே நெடுகப் பேசி நம்பிக்கை தோற்றுவிப்பது.

சீதை தனது சூளாமணியை அனுமனிடம் தந்து, அதை இராமனிடம் சேர்க்கக் கூறினாள். 'ஒரு திங்களுக்குள் இராமன் வராவிடில் உயிர் துறப்பேன்: அங்கே கங்கையாற்றங்கரையில் தன் செய்கையால் கடன் செய்க எனக் கூறு. சுக்கிரீவனைக் கொண்டு இராமனுக்கு அயோத்தியில் முடிசூட்டச் செய்' என்றெல்லாம்அயர்வு மொழிகள் கூறி அனுமனை அயரவைத்தாள்.நூல் பல கற்ற அனுமன் தன் சொல்லின் செல்வனாய் சீதையிடம் அசதி ஆடினான்.

உடன்பாடாக உரைப்பது போல் எதிர்மறைப் பொருள் பேசுவதே அசதியாடல் என்பதாகும். அவ்வாறு எதிர்மறைப் பொருள்கள் வெளிப்படுவதாக பாடலை அமைப்பது கவிஞனின் திறமை.

இராமபிரான் 'பதினான்கு ஆண்டுகள் முடியும் முன்னர் எந்த நகரிலும் புகேன் என்று விரதம் எடுத்தவன். அதை நினைவில் கொண்டு அநுமன் பேசுகிறான்.

*வீவாய் நீ இவண்: மெய் அஃதே?*
*ஒய்வான், இன் உயிர், உய்வானாம்!*
*போய், வான் அந் நகர் புக்கு அன்றோ*
*வேய்வான் மௌலியும்? மெய் அன்றோ?* (5384)

நீ இங்கே இறந்து விடுவாய்: அது உண்மையே: நீஇறந்த பின், தளர்ந்து விடும் இராமன் தன் இன் உயிரைத் தன்னுடன் வைத்துக் கொண்டு வாழ்வானாம்! அயோத்தி புகுந்த பிறகல்லவா மௌலி சூடுவான். இவைதானே உண்மையில் நடக்கப் போகின்றவை. அதை விட்டு என்ன பேசுகிறீர்கள்!

*கைத்து ஒடும் சிறை, கற்போயை*
*வைத்தோன் இன் உயிர் வாழ்வானாம்!*
*பொய்த்தோர் வில்லிகள் போவாராம்!*
*இத்தோடு ஒப்பது யாது உண்டே?* (5385)

கற்பின் வடிவமான உன்னை மற்றவர் வெறுக்கச் சிறையில் வைத்தவன் இராவணன்: அவன் வாழ்ந்திருப்பானாம்! ஒப்பற்றவில் ஏந்திய இராம- இலக்குவர்கள், கடமையிலிருந்து திரும்பிப்போய் விடுவார்களாம்! இதற்கு ஈடான நிகழ்ச்சியை எங்கேயாவது கண்டது உண்டா?

'அரக்கர்களை அழித்து அறத்தை நிலை நாட்டுவேன்' என்று தண்டகவனத்து முனிவர்பால் கூறியதை நிறைவேற்றாது போகான் என்பதைக் குறிப்பாகச் சொன்னான் அனுமன்.

*நல்லோய்! நின்னை நலிந்தோரைக்*
*கொல்லோம், எம் உயிர் கொண்டு அங்கே*
*எல்லோமும் செல, எம் கோனும்*
*வில்லோடும் செல வேண்டாவோ?* (5386)

நற்பண்பு கொண்ட தாயே! உன்னை வாட்டி வறுத்திய அரக்கர்களைக் கொல்லாமல், எங்கள் உயிரைச் சுமந்து கொண்டு அயோத்திக்குப் போய் விடுவோம். எங்களைப் போல, எம்கோன் இராமபிரானும் வில்லுடன் போக வேண்டியதுதானே?

'இது எவ்வாறு நிகழும்? எங்கள் உயிர் இருக்கும் வரையிலும், இராமபிரான் கையில் வில் இருக்கும் வரையிலும் நாங்கள் போராடி உன்னை மீட்போம்' என்பதைக் குறிப்பால் உணர்த்தினான். வாலியால் அடிமைப்பட்ட சுக்கிரீவன் முதலானோர் இராமபிரனால் விடுதலை பெற்றனர். அந்தப் பெருஞ்செல்வம் ஈந்தானுக்கு நாங்கள் உன்னை விடுவித்து ஈவோம். ஈவாது செயல் அற்றுக் கிடந்தால் எம்மை விட உயர்ந்தவர் யார்?

*நீந்தா இன்னலின் நீந்தாமே,*
*தேய்ந்து ஆறாத பெருஞ் செல்வம்*
*ஈந்தானுக்கு உனை ஈயாதே*
*ஒய்ந்தால் எம்மின் உயர்ந்தார் யார்?* (5387)

*நன்று ஆம் நல்வினை நல்லோரைத்*
*தின்றார் தம் குடர்பேய் தின்னக்*
*கொன்றால் அல்லது, கொள்ளேன் நாடு*
*என்றானுக்கு, இவை ஏலாவோ?* (5388)

முனிவர்கள் நல்லவற்றையே ஆய்வர்; சிறந்தவற்றையே

செய்வர், அவர்களை அரக்கர்கள் வயிறு ஆரத் தின்றனர். அவர்களைக் கொல்லாமல் கோசலம் திரும்பி முடிசூட மாட்டேன் என்று தண்டகவனத்து முனிவர்க்கு கூறியவன் இராமன். அரக்கரை அழித்தலும் சிறை மீட்டலும் அவனால் முடியாத செயலா? முடியும்; அவனால் முடியும்.

வலிமை அற்ற அரக்கர்கள் உன்னைச் சிறை வைத்தனர்; உன்னை மீட்டு விட்டோம் என்று கூறாமல் நாங்கள் திரும்பிச்சென்றால்,நாட்டு மக்களும், நல்ல நூல் படித்த அறிஞர்களும் அதை ஏற்பரோ? எப்படி ஏற்பர்? நீ நம்பிக்கை இழந்து பேசலாமா?

*மாட்டாதார் சிறை வைத்தோயை,*
*மீட்டாம் என்கிலம் மீள்வாமேல்,*
*நாட்டார், நல்லவர், நல்நூலும்*
*கேட்டார், இவ் உரை கேட்பாரோ?* (5389)

*பூண்டார் கற்புடையாள், பொய்யாள்,*
*தீண்டா வஞ்சகர் தீண்டா முன்,*
*மாண்டாள் என்று, மனம் தேறி*
*மீண்டால், வீரம் விளங்காதோ.* (5390)

சீதை இறந்து பட்டாள். இனிப் பகைவருடன் போராடுவதால் பயனில்லை என்று திரும்பினால் எங்கள் வீரம் விளக்கம் அடையாதா?

பிரிவு என்னும் துயரால் நீ உயிர் துறந்தாய் என்றால் நான் அழிந்தேன். பகைவர்களான அரக்கர்களுடன் ஏழு உலகங்களையும் சுட்டு எரித்தாலும் பழி நீங்காதே

*கெட்டேன்! நீ உயிர் கேதத்தால்*
*விட்டாய் என்றிடின், வெவ்அம்பால்*
*ஒட்டாரோடு, உலகு ஓர் ஏழும்*
*சுட்டாலும், தொலையா அன்றோ?* (5391)

இங்கு அனுமன் அசதியாடலை மாற்றினான்;

இராமனின் நிலையையும் அவனது துணைவர்களான வானரர் நிலையையும் எடுத்து இயம்பினான். பின்னர், இராமன் அரக்கரை அழியாது வாளா இரான் என்று குறிப்பிடுகின்றான். இராமபிரான் சீற்றம் அரக்கரைக் கொன்று, அவன் பால் அது மீட்டும் ஒடுங்க வேண்டும். இல்லெனின் புவி வானோடும் அழியுமே! இராமனின்

சதானந்தர் அது கேட்டு பெரிதும் உவகையுற்று-விசுவாமித்திரர் அருள் துணையாக இருந்தால் ஆகாதது எது என்று கூறி இராமனுக்கு விசுவாமித்திரர் வரலாற்றை முழுவதுமாக கூறினார்.

அன்றிரவு விருந்தினர் மாளிகையில் தங்கி, மறுநாள் காலை நடைபெற்ற வேள்வி முடித்து வந்த சனக மன்னனை சந்தித்தனர் மூவரும். இராம இலக்குவரைக் கண்டு, அவர்கள் அழகில் மயங்கிய சனக மன்னன் அவர்கள் யார்? என விசுவாமித்திரரிடம் கேட்டான் விசுவாமிதித்திரர், 'இவர்கள் உன் மாளிகை விருந்தினராக என்னுடன் வந்தனர்-சீதைக்காக வில் நாணை ஏற்றவும் காண்பர். பெரும்புகழ் பெற்ற தசரதனின் குமாரர்கள் என்று இரகுவம்சம் பெருமையெல்லாம் எடுத்துக் கூறினார். அடுத்து தயரதனுக்கு மக்கள் செல்வம் இல்லாது இருந்தும்- கலைக்கோட்டு முனிவர் செய்த யாகத்தால் நான்கு குமாரர்கள் பிறந்ததும் எடுத்துரைத்தார்.

அவன் பிறப்பு வரலாற்றை எடுத்து விளக்கி உரைக்கையிலேயே ஏற்கனவே அவனது பொலிவையும் அழகையும் கண்டு மயங்கிய சனக மன்னன்- தன் மகள் சீதைக்கு அவனே ஏற்றவள் அவனே அவளுக்கு வாய்த்திட வேண்டும் என மனதில் விருப்பமுற்று நினைக்கும் அதே தருணத்திலேயே இராமனால் வில்லைநாணற்றி வெல்லமுடியுமா என்கிற சந்தேகத்திலும் அதோடு பல மனைவியர் கொண்ட தயரதனுக்கு பிள்ளையா? என்ற தயக்கத்திலும் சஞ்சலத்திலும் தவிப்பதை முகக் குறிப்பால் முற்றும் உணர்ந்த விசுவாமித்திரர் முனிவர் அவனது அந்த இரண்டு கேள்விகளுக்கும்- சந்தேகங்களுக்கும் முற்றுப்புள்ளி வைக்கும் விதமாக சனக மன்னனை நோக்கி விசுவாமித்திரர், இராமன் தாடகையை அழித்து அரக்கர் பலரையும் கொன்று பெரு வேள்வியைக் காத்ததையும் அகலிகைக்கு இவனால்தான் சாப விமோசனம் கிடைத்தது என்கிற மாபெரும் செய்கையினை எடுத்து கூறி இராமனுக்கு அம்புகளை தானே தந்திருந்தாலும் அவற்றை வில்லில் பூட்டி அவன் விடும் திறம் கண்டு வியந்துள்ளேன் என சொன்னதன் முலம் இராமன் வில் ஏற்றுவான் என்கிற நம்பிக்கையை சனக மன்னன் மனதில் தோற்றுவித்தான்.

பல மனைவியர் கொண்ட தயரதவனுக்கு பிள்ளைதான் என்றாலும்-

ஒரே மனைவியை உடைய வசிட்டன்தான் இவனை முறைப்படி வளர்த்தான். கல்வி பயில்வித்தான் என்கிற வாசகத்தை ஆழமாக அழுத்தமாக அர்த்தமுள்ளதாக வலியுறுத்தி விசுவாமித்திரர் கூறிய பாடல் இதோ :

*திறையோகும் அரசு இறைஞ்சும்*
*செறிகழல் கால் தசரதன்ஆம்*
*பொறையோடும் தொடர் மனத்தான்*
*புதல்வர் எனும் பெயரே காண்!*
*உரைஓடும் நெடுவேலாய்!*
*உபநயன விதி முடித்து,*
*மறைஓது வித்து இவரை*
*வளர்த்தானும் வசிட்டன் காண்* (660)

பெயரளவில் தான் தயரதன் தந்தை. ஆனால் அவனது ஞானத் தந்தை வசிட்டன் என்பதன் மூலம் ஒருவனின் தனிச் சிறப்பு - பண்பு நலம் -நற்குண சேர்க்கை மேன்மை, உயர்வு யாவும் அடிப்படையில் அவனை சேம்மைபடுத்திய- நெறிப்படுத்திய -நல்வழிக்காண்பித்த- கல்வி பயில்வித்த ஆசிரியரையேசாரும் என்கிற மாபெரும் தத்துவத்தை இதன்மூலம் கம்பர் வெளியிட்டிருக்கும் செய்தி அர்த்தமுள்ளதே அல்லவா?

இதனை நாம் இன்றைய காலகட்டத்திலும் சொல்லப்படுவதை- உணர்த்தப்படுவதை- பெருமையாகப் பேசப்படுவதை-இன்னாரின் மாணாக்கன் நான்- இவரிடம் பயின்றவன் நான் இந்தப்பள்ளியில்- கல்லூரியில்- நிறுவனத்தில் நெறிபடுத்தப்பட்ட பக்குவப்படுத்தப்பட்ட - செதுக்கப்பட்ட மாணவன் என தலை நிமிர்ந்து மார்பு தட்டி பெருமிதத்துடன் சொல்லி வருவதை காண்கிறோம் அல்லவா.

நமது வாகீச கலாநிதி கி.வா.ஜ அவர்கள் தன்னை மகாமகோபாத்யாய உ. வே. சா. அவர்களின் சீடர் என்று தன் இறுதிமூச்சு வரையிலும் சொல்லி வந்ததையும் அந்தப் பெருந்தகை உ.வே.சா. அவர்கள் தன்னை மீனாட்சி சுந்தரம் பிள்ளை மாணாக்கன் என்று சொல்லி பெருமைபட்டதையும் எழுதி வந்ததையும்

இசையுலகில்- தான் இன்னாரின் சீடர் என்று சொல்லி அறிமுகப்படுத்திக் கொள்ளும் பாரம்பரிய வழக்கத்தையும், மரபையும் இலக்கிய உலகில் அமரர் மு.வ. அவர்கள் மாணாக்கன் என்று

இன்றுகூட நம்மிடையே பெருமையாக கூறிவரும் பலரின் அறிவிப்புக்களையும் பத்திரிகை உலகில் தீபம் பார்த்த சாரதியால் தான் உருவாக்கப்பட்டதாக திருப்பூர் கிருஷ்ணன் அறிவிப்பதையும்,

தமிழ் இலக்கிய கம்பர் மேடைகளில் தான் திருச்சி இராதாகிருஷ்ணன்" தயாரிப்பு எனப் பெருமையுடன் அறிமுகம் படுத்திக் கொள்வதையும் சமுகத்தில் ஒரு குறிப்பிட்ட கல்லூரியில் படித்தவன் என்று சொன்னால் கிடைக்கின்ற மதிப்பையும் மரியாதையையும் காணும் போதும்,

ஒரு குறிப்பிட்ட பல்கலைக்கழகப் பட்டதாரி என்றால் இந்தியாவில் கிடைக்கும் மதிப்பும் மரியாதையும் கண்கூடாக பார்க்கிறோம் கேட்கிறோம்.

இம்மாதிரியாக எண்ணற்ற சான்றுகளையும் நிதர்சனமாக காணும் போது

**அன்று கம்பர் சொன்னது - அர்த்தமுள்ளதல்லவா?**



# அறவழி நிற்கும் அதிகாயன்

( கம்பன் கலைச்செம்மல் நா. நஞ்சுண்டன்)
செயலாளர் கோவை கம்பன் கழகம்

இராமாயண காவியத்தில் தயரதன், இராமன், இலக்குவன், பரதன், இராவணன், கும்பகர்ணன், இந்திரஜித், வாலி, சுக்ரீவன், அனுமன் போன்ற பெரும்பாத்திரங்களைப் பற்றி கம்பன் விழா மேடைகளிலேயும், பட்டி மண்டபங்களிலேயும், கட்டுரைகளிலேயும், பரவலாகப் பேசப்பட்டு, எழுதப்பட்டு வந்திருப்பதை நாம் அறிவோம். பிற பாத்திரங்கள் பற்றி அங்கொன்றும், இங்கொன்றுமாக சில செய்திகள் சொல்லப்பட்டிருக்கின்றனவேயொழிய, முழுமையாகப் பாத்திரங்கள் பற்றிப் பேசப்படுவதில்லை. காரணம், கதையின் தொடர்புக்குப் பெரிய பாத்திரங்கள் மையமாக இருப்பதுதான். இருப்பினும் கம்பன் தன் கைவண்ணத்திலே, எந்தப் பாத்திரமாக இருந்தாலும், அதனை முழுமையாக வடித்தெடுத்து, கதையிலே அதனைச் சொல்லும் படியாகச் செய்துவிடுவான். அவ்வாறு சொல்லிய பாத்திரங்களுள் இராவணன் மகனுகிய அதிகாயனும் ஒருவன். இராவணனின் மனைவியான தானியமாலையின் மகனுமாவான். அதிகாயன் என்ற சொல்லுக்கே மிகப்பெரிய தேகத்தை உடையவன் என்பது பொருள். முன்பொரு காலத்தில் தேவர்களுக்கு யமனாக விளங்கிய மது கைடவர்களில், மது கும்பகர்ணனாகவும் கைடவன் அதிகாயகனாகவும் பிறந்தனர் என்று புராணம் பேசும்.

பொதுவாக அரக்கர்கள் "இரக்கம் ஒன்று இலாத நெஞ்சினர்" எனக் குறிப்பிடுவார்கள்.மூலகநூலான வான்மீகத்தில் அதிகாயனைப் பற்றி இப்படிச்சொல்லப்பட்டிருக்கிறது இவன்.

இராவணனுக்கு நிகரான போர் வலிமை உடையவன். பெரியவர்களிடம் பழகியவன். வேதங்களை ஓதி உணர்ந்தவன். அரச நீதியில் வல்லவன். போர்க்கலையில் நிபுணன். பிரம்மனை நோக்கித் தவம்புரிந்து தேவர்கள் அசுரர்கள் ஆகியோர்களால் சாகாவரம் பெற்றவன். சிறந்த கவசமும், ஒளி வீசும் தேகமும் பெற்றவன். வருணனது பாசத்தைத் தகைத்தவன். அரக்கர்களில் உத்தமன்.நல்லறிவு உடையவன் என வீடணால் இராமனுக்கு அறிமுகப்படுத்தப்பட்டவன்.

கம்பனின் இராம காதையில், அதிகாயனப் பற்றி வீடணன் சொன்னவற்றைப் பார்ப்போம்.

*ஓவா நெடுமாதவம் ஒன்று உடையான்*
*தேவாசுரர், ஆதியர் செய் செருவில்*
*சாவான் இறையும் சலியா வலியான்*
*மூவா முதல் நான் முகனார் மொழியால்* (7782)

வான்மீகியின் கூற்றை கப்படியே கம்பன் சொல்லுகிறான். மேலும் தேவர்களும் சுகார்களும் அமிர்தத்திற்காக கடைந்த பாற்கடலை தன் கால்களாலேயே கலக்க வல்லவன். சக்கரவாளமலையையே தன் உள்ளங் கையினால் தள்ளக் கூடிய வலிமை பெற்றவன் என்றும், சிவபெருமான் சூலப்படையை எறிந்தால் அதையும் கைப்பற்றி வீரமொழி சொல்லவல்லவன் என்பதை,

*"ஆலம் கொள் மிடற்றவன் ஆர் அழல்வாய்*
*வேல் அங்குஎறிய, கொடு: விட்டது நீள்*
*சூலம் கொல் எனப் பகர் சொல்லுடையான்-என்றும்* (7786)

இவன் திருமாலின் சக்கராயுதத்தையே தன் அம்பால் தடுத்துநிறுத்தக் கூடியவன். "மிகை ஆர் உயிர் உன் என வீசியவெந் தகை ஆழிதகைந்த தனுத் தொழிலான்" என்றும் சிவபெருமானிடத்திலேயே வேதங்களைக்கற்றவன் மற்றவர்கள் எவரும் பெறாத ஆயுதங்களை அவரிடமிருந்து பெற்றவன், வீடு உணர்வாகிய ஆண்மையைப் பெற்றவன்

*கற்றான் மனதை நூலொடு கண்ணுதல் பால்*
*முற்றாதன தேவர் முரண்படை தாம்*
*மற்றுஆரும் வழங்கவரார் இலவும்*
*பெற்றான் ; நெடிது ஆண்மை பிறந்துடையான்'* (7789)

என்றும் மேலும் அறத்தைத் தவிற வேறு அறியமாட்டான். போர் நேரங்களில் அல்லாமல் பிற நேரங்களில் பிற உயிர்களுக்கு தீங்கு விளைவிக்க மாட்டான் பெரும் புகழ்தான் நலம் தரும் என்ற நல்லுணர்வை உடையவன்

*அறன் அல்லது நல்லது மாறு அறியான்:*
*மறன் அல்லது பல்பணி மாறும் அணியான்*
*திறன் அல்லது ஓர் ஆர் உயிரும் சிதையான்*
*உறல் நல்லது பேர் இசை என்று உணர்வான்* (7790)'

என இவனது அறச்சிந்தனைகள் தரும வழியில் நடப்பதை கம்பன் பேசுகிறார்

*காயத்து உயிரேவிடு காலையினும்,*
*மாயத்தவர் கூடி மலைந்திடினும்,*
*தேயத்தவர் செய்குதல் செய்திடினும்,*
*மாயத் தொழில் செய்ய மதித்திலனால்'* (7791)

என்று மாய தந்திரத் தொழில்களில் எப்பொழுதும் ஈடுபட மாட்டான் என்றும் பேசுவது குறிப்பிடத்தக்கது.

இது அதிகாயனது போர் நேர்மையை எடுத்துக்காட்டுகிறது. வால்மீகத்தில் சொல்லப்பட்ட கருத்துக்களில், போர்நெறியில் நிபுணன்.அரசநீதியில் வல்லவன் என்ற செய்தியை எடுத்துக் கொண்டு மாயச் செயல்களில் ஈடுபடமாட்டான் என்பதையும் போர் முறைகளில் நெறி தவறும் செய்கைகளில் ஈடுபடமாட்டான் என்பதையும் கம்பர் மிக அழகாக அதிகாயன் பேரில் சொல்லி பாத்திரத்திற்கு மெருகூட்டி விட்டார் என்பதை சொல்லவேண்டும்.

அதிகாயனது செயல்கள் தனித்தன்மை உடையனவாகவே இருக்கிறது. இராமாயணத்தில் தூது சென்றவர்கள் என்ற பெருமை அனுமனுக்கும், அங்கதனுக்கும் உண்டு. இவர்கள் இராமனால் தூது அனுப்பப்பட்டவர்கள். ஆனால் அரக்கர்கள் பக்கமிருந்து இராமனுக்கு ஒருவன் தூதாக அனுப்பியவனை நாம் கண்டிருக்கிறோமா? இச் செய்தி நமக்கு வியப்பாக இருக்கலாம். ஏன் கதையின் போக்கிலே கண்டு கொள்ளாமல் விட்டிருக்கலாம். இராமன் பக்கம் தூது அனுப்பப்பட்டவன் அதிகாயன் மூலநூலான வான் மீகத்தில் இது பற்றிய குறிப்பு இல்லை.

அதிகாயன் பற்றிய வான்மீகத்தின் செய்திகளிடமிருந்து மேலும் அவனுக்கு உயர்வுச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில் இத்தூது விடும் பகுதியை கம்பன் அமைத்திருக்கிறான் என்றே எண்ணத் தோன்றுகிறது. மேலும் அறவழியில் சிந்திப்பவர்கள் போர்த்தருமங்களை கடைப்பிடிப்பவர்கள் எதனைச் செய்வார்களோ அவற்றையே அதிகாயனும் செய்தான் என்று கம்பர் சொல்லுவது மிகவும் பொருத்தம் உடையது.

மந்திராலோசனை சபையில் வருத்தமுற்று இராவணனுக்கு அதிகாயன் ஒரு சபதம் செய்வதாகச் சொல்லுகின்றான். 'நான்

உன்னுடைய மகன் என்பது உண்மையானால் இராமன் தம்பி இலக்குவனைக் கொன்று, நீ படும் துன்பத்தைப் போல் இராமனும் படுமாறு செய்வேன் எனப் பேசுகிறான்.

*உம்பிக்கு உயிர் ஈறு செய்தான் ஒருவன்*
*தம்பிக்கு உயிர் ஈறு சமைத்து அவனைக்*
*கம்பிப்பது ஓர்வன் துயர் கண்டிலனேல்*
*நம்பிக்கு ஒரு நன் மகனோ இனி நான்* (7738)

பின்னர் இராவணன் ஆசியோடு போர்க்களம் செல்கின்றான் மேலைநாட்டு இலக்கியங்களிலே போருக்குச் செல்லும்முன் சபதம் செய்து செல்வது என்பதை மரபாகக் கொண்டு பல காப்பியங்கள் படைக்கப்பட்டிருக்கின்றன. அதற்கு ஈடாக கம்பனிலேயும் அதிகாயன் சபதம் முக்கியத்துவம் பெறுகிறது.

போர்க்களத்திற்குச் சென்ற அதிகாயன், தலையற்ற கும்பகர்ணன் உடலைக்கண்டு வருந்துகின்றான். இலக்குவனைப் போரில் கொல்லுவேன் என்று இராவணனுக்குச் சொன்ன சபதத்தை நினைவில் கொண்டு, தன்னுடன் தனியே போர் செய்ய வருமாறு இலக்குவனுக்கு தூது அனுப்ப முடிவு செய்து,மயிந்தன் என்பவனை தூதாக அனுப்புகிறான். இங்கு ஒரு செய்தியை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். இராவணன் மீது போர் தொடுக்கச் செல்லுமுன் அங்கதனை தூதாக இராமன் அனுப்ப எண்ணுகிறான். இதற்கு சுக்கிரீவன் வீடணன் ஆகியோர் உடன்பாடு தெரிவிக்கின்றன. ஆனால் இலக்குவன் இதற்கு மறுப்புத் தெரிவிக்கிறான். தூதை விட போர்தான் சிறந்தது எனச் சொல்லுகிறான். தூது விடுவது நீதி 'நூல் முறையாகும் என்பதை

"அறிஞர் ஆய்ந்த நலத்துறை நூலின் நீதி

அறம் துறந்து அமைதல் நன்றோ என்று இராமன் மறுமொழி சொல்வது ஒப்பு நோக்கத்தக்கது.

இராமன் செய்ததைப் போலவே இலங்கையிலும் மறை நூல்கள் மற்றும் அரசியல் நீதிகளை முற்றாக அறிந்த அதிகாயன் போருக்குச் செல்லுமுன் யாருடன் போர்செய்ய வேண்டும் என்ற பண்பாட்டினையொட்டி தூது அனுப்ப முடிவு செய்தது போர்த்தருமங்களில் வழுவாதவன் என்பதைச் சுட்டிக் காட்டுகிறது.

தூது செல்லும் மயிந்தனிடம், இராவணனிடம் தான் செய்த சபதமாகிய

*ஒருதன் அற்று உருளக் கணை தள்ளிடுவான்*
*கூறுற்றதும் உண்டு சொல்லுதியால்" என்றும்* (7760)

*"தீது என்று அது சிந்தனை செய்தினால்*
*ஈது என்று அறம் மன் நெறி ஆம்'* (7761)'

என்றும் சொல்லி தூது அனுப்பினான். இங்கு இராமன் சொன்ன நீதி நூல் முறையாகும்" என்ற செய்தியை ஒப்பிட்டுப் பார்ப்பது பொருத்தமாக இருக்கும்.

பின்னர் போர்க்களத்தில் இருவரும் நேருக்கு நேர் சந்திக்கிறார்கள் தனியாக போருக்கு வருகிறயா? அல்லது படைகளுடன் வருகிறயா? எனக் கேட்ட இலக்குவனுக்கு தனியாகப் போர் செய்வேன் என்றுபோர் புரிகிறான் அதிகாயன். உடல் முழுவதும் அம்புகள் சல்லடைக் கண்ணாகத் துளைத்த போதும் உயிர் தாங்கி நின்று, பொன்ற நின்ற வரம்பின் வாளி மழை பொழிந்த வில்லாளனாக இருக்கிறான்.

இலக்குவனோடு நடந்த போரில் அதிகாயன் எண்ணியிருந்தால் இந்திரஜித்தைப் போல் மாயம் செய்து மறைந்து நின்று எதிரிகளை நிலைகலங்கச் செய்திருக்க முடியும். ஆனால் போர் நெறிகளில் கூட அறத்தையே கடைப்பிடிக்க விரும்பும் அதிகாயன் அவ்வாறு செய்யவில்லை என்பது முன் சுட்டிய செய்தியால் அறிய முடிகிறது.

எனவே அரக்கர் குலத்திலே நேர்மையைக் கடைப் பிடிப்பவனாகவும் அறத்தினின்றும் வழுவாது முவாகனாகவும், மாய வஞ்சனை இல்லாதவனாகவும் எதிராளிக்கு தூது அனுப்பி போருக்கு வரச் சொன்ன முதல்வனாகவும் அதிகாயன் திகழ்ந்தான் என்பதைப் பார்க்கும் போது நாம் பிரமித்து நிற்கிறோம். எனவேதான் கம்பன் அதிகாயனை குறிப்பிடும் பொழுது விதி தயாயினும் வீரம் வெல்லற்கு அறியான் என்றார்.

இவ்வாறு பாத்திரங்களுக்கு மெருகு ஏற்றி பளிச்சிடச் செய்ய கம்பன் ஒருவனால்தான் இயலும். எனவே தான் நாம் அவனை கவிச் சக்கரவர்த்தி எனப் போற்றுகிறோம். வ.வே.சு. அய்யர் அவர்கள் மேனாட்டு இலக்கியங்கள் நன்கு கற்றவர். ஷேக்ஸ்பியர், ரோமர், மில்டன், தாந்தே போன்ற கவிஞர்களின் காப்பிங்களை கம்பனோடு ஒப்பீடு செய்து பார்த்து கம்பனுக்கு இணையாக இவர்களைச் சொல்ல முடியாது. இவர்களிலும் மேம்பட்டவர் கம்பன். எனவேதான் கம்பனைக் கவிஞர் வாழ்த்தி கவிச்சக்கரவர்த்தி என்று சொல்ல வேண்டும் என்றார்.

நமது நாட்டிலேயும் கம்பனுக்கு முன்பும் பின்பும் எத்தனையோ காவியங்கள். இராமாயணம் போன்றவைகள் பல்வேறு மொழிகளிலே வந்துள்ளன. இவை அல்லாமல் ஏனைய பிற நாட்டுக் காவியங்களும் உள்ளன. இவைகளை எல்லாம் ஆராய்ந்து, கம்பனது தனித்தன்மையை ஒப்பிட்டுப் பார்த்து கம்பன் தான் கவிச் சக்கரவர்த்தி என்னும் புகழை நிலைநாட்டுவது நமது கடமையாகும். இதற்கு பன்மொழி அறிஞர்களும் கம்பன் கழகங்களும் இதனைச் செய்ய முன்வர வேண்டும். இதுதான் கம்பனுக்கு நாம் செய்யும் தொண்டும் மரியாதையும் ஆகும்.



# கண்ணாம்பூச்சி

-பழ. பழனியப்பன்
(செயலாளர் காரைக்குடி கம்பன்கழகம்)

கடவுளை நீங்கள் நேரில் பார்த்ததுண்டா?

கடவுள், அப்படி ஒரு வேளை, உங்கள் முன் தோன்றினால் என்ன கேட்பீர்கள்?

இன்னொரு மனை? நிலம்? வீடு? புதிய வாகனம்? பொன் ஆபரணங்கள்? நிறையப் பணம்? இல்லை, இவையெல்லாம் இல்லை: இவை நிலையில்லாப் பொருள்கள் என்று அறிந்த (உணர்ந்த அல்ல) அரைப் பக்குவ ஞானியானால், இப்பிறவியிலேயே வீடு பேறு?

மேல் ஒரு பொருளும் இல்லா மெய்ப்பொருள் வில்லேந்தி கால் தரை தோய இராமபிரானாய் அவதாரித்து, கண் புலனுக்கு உட்பட்ட போது விராதன் கேட்டதுதான் வேடிக்கையானது. கம்பன், இந்த இடத்தில் கணக்கற்ற ஞானிகள் காலங்காலமாய் விண்டுரைத்துக் காட்ட முடியாது தவிக்கும் வினா ஒன்றினை சர்வசாதரணமாய் எழுப்பி தீர்வு காண முயல்கிறான்.

பரம்பொருள் என்றாலே ஆதியும் அந்தமும் எல்லாமுமாய் உள்ளது தானே! பிறைசூடியைத் தொழுபவராகட்டும், பிறையைத் தொழுபவராகட்டும், ஸ்ரீசூர்ணம் இட்டுத்துதிப்பவராகட்டும் சிலுவைக்குறி இட்டுத் துதிப்பவராட்டும் எல்லோருடைய சமயமும் ஆழ, அகலம் அறிய மாட்டாத பரம்பொருளைப் பற்றியவை தானே! அப்படியிருந்தும், அந்தப் பரம்பொருள் ஏன் வெளிப்பட்டுத் தன் சுய சொரூபத்தை வெளிச்சம் போட்டுக் காட்டுவதில்லை? தீயவர்களைப் போலவே உலகோர் கண்களில் படாமல் ஏன் ஒளிந்து விளையாட்டுக் காட்டுகிறது?

கம்பனின் பாடலில் விராதனின் சொற்கள் எப்படிச் சரங்களாய்ப் புறப்படுகின்றன, பாருங்கள்!

*நீ ஆதி பரம்பரமும்: நின்னவே உலகங்கள்*
*ஆயாத சமயமும் நின் அடியவே: அயல் இல்லை:*
*தீயாரின் ஒளித்தியால்: வெளிநின்றால் தீங்கு உண்டோ?*
*வீயாத பெருமாய விளையாட்டும் வேண்டுமோ?*

– ஆரணிய காண்டம், விராதன் வதைப்படலம் (416 : 53)

இப்படிக் கேட்பவன் யார் என்பதை மறந்து விடக்கூடாது. இது நாள் வரை 'நன்று தீது நாடாது, தின்று தீயதே தேடிய' அரக்கனாகிய விராதன்தான் கேட்கிறான். மேலோட்டமாகப் பார்த்தால் அவனுடைய கேள்விக் கணையின் தீட்சண்யம் சட்டென்று புலப்படாது நமக்கு.தீமையே செய்து வெளியில் வராமல் காட்டிலேயே ஒளிந்து வாழ்ந்தவனாதலால் கடவுள் தன்முன் காட்சி அளித்ததும் கள்ளமாய் வாழ்வெல்லாம் கழிந்து போகவே கேள்வி தொடுக்கிறான். 'கடவுளே நீயும் ஏன் என்னைப் போல ஒளிந்து கொண்டுள்ளாய்? எல்லாமே நீ என்பதால் நீ வெளிப்பட்டால் உனக்கு தீங்கு வருமா, என்ன? அல்லது உன்னால் உயிர்களுக்கு தீங்கு வருமோ? ஒளிந்திருக்க வேண்டுமென்பதற்கு உனக்கு யாதெரு காரணமும் இல்லையே ! பின் எதற்காக நீ உன்னை ஒளித்துக் கொண்டு இந்த கண்ணாம்பூச்சி விளையாட்டுக் காட்டுகிறாய்?

உலகம் தோன்றிய நாளிலிருந்து இன்று வரை விடை காண முடியாமல் இருக்கின்ற ஒரு வினா இது.

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற விஞ்ஞானியும், கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகப் பேராசிரியருமான ஸ்டீபன் ஷாகிங்கும் இதே கேள்வியைக் கேட்டு: 'இதற்கு விடை கிடைத்தால், கடவுளின் சிந்தையைப் பற்றிய தேடலில் மனித குலத்தின் மகோன்னதமாக வெற்றியாகும்' என்று காலம், வெளி பற்றிய தன்னுடைய ஆய்வின் இறுதி முடிவாக அறிவித்தார் ("If we find the answer to that, it would be the ultimate triumpth of human reason - for then we would know the mind of God" ... " A Brief History of Time - From the Big Bang to Black Holes" by Stephen W. Hawking)

தீயவர்கள் மறைந்து வாழ்வது இயற்கை: அப்படியானால் இறைவனும் தீயவனா? இல்லையெனில்,குழந்தைகள் விளையாட்டைப் போல் ஒளிந்து கொண்டு "கண்ணாம்பூச்சி" காட்டி நம்மோடு விளையாடுவதில் அவனுக்கு விருப்பமோ?

விராதன் தொடர்ந்த மற்றொரு கேள்விக் கணை:' 'பரம்பொருளால் படைக்கப் பெற்ற உயிர்கள் பரம்பொருளைப் பற்றிய உண்மை நிலையைச் சிறிதேனும் தெரிந்து கொண்டு உய்வடையக் கூடாதா? அப்படி அவை உய்வடைந்துவிட்டால், பரம்பொருளுக்கு ஏதேனும் குறைவு ஏற்பட்டுவிடுமோ?"

*"மெய்யைத்தான் சிறிது உணர்ந்து நீ விதித்த மன்னுயிர்கள்*

*உய்யத்தான் ஆகாதோ? உனக்கு என்ன குறை உண்டோ?"*

(417;58)

இராமனின் திருவடியால் உந்தித் தள்ளப் பெற்றதால், அரக்க உடம்பிலிருந்து விடுபட்டு பிறவாமையாகிய வீடு பேற்றை நேரிடையாக... பள்ளியிறுதி தாண்டாதவன் முனைவர் பட்டம் பெற்றது போல்... அடைந்தவனல்லவா விராதன் !

அதனால் இறைவனின் இந்தக் கண்ணாம்பூச்சி விளையாட்டுக்கு விராதன் ஒரு சிறிது சமாதானம் கண்டுபிடிக்கிறான் என்று கல்வியில் பெரிய கம்பன் நமக்கு மாபெரும் பிரபஞ்ச ரகசியம் ஒன்றின்மீது ஒரு சிறு வெளிச்சம் போட்டுக் காட்ட முயல்கிறான்.

"மனிதர்களைவிட ஓரறிவு குறைந்த பசு கூட கூட்டமாய் உள்ள கன்றுக்குட்டிகளிடையே தன் கன்றை அறிந்து கொண்டு நக்கிக் கொடுக்கும்: கன்றுக்குட்டியும், அதே போலவே, கூட்டத்திடையே கூட தன் தாயை அறிந்து ஓடிப்போய்முட்டும்.உலகத்தை ஈன்ற தாயாம் கடவுளுக்கு எல்லா உயிர்களையும் தெரியும்: ஆனால் அவரின் படைப்பான ஆறறிவு உடைய உயிர்களுக்கு தங்களைத் தோற்றுவித்து ஈன்ற தாயான அவரைத் தெரிந்து கொள்ள முடிவதில்லையே. அது ஏன்?"என்று விராதனைப் பேச வைக்கும் கம்பநாடன் பாடலின் ஈற்றடி இறுதியில் ஒரு பதப் பிரயோகம் செய்து முடிச்சை அவிழ்க்க முயற்சிக்கிறான்.

' நீ அறிதி எப்பொருளும்: அவை உன்னை நிலை அறியா:

மாயை இது என்கொலோ? -வாராதே வர வல்லாய்" (416;54)

அது என்ன, வாராதே வர வல்லாய்?வராமலேயே எப்படி ஐயா வர முடியும்? வருதலாகிய வினையைச் செய்யாமலேயே ஒருவன் எப்படி வந்ததாகக் கொள்ள முடியும்?

வர முடியும் என்று கம்பன் எப்படிச் சொல்கிறான்? ஒரு உதாரணத்தைப் பார்த்தால் புரியும்: நாம் சென்னையிலிருந்து செங்கல்பட்டிற்கு பேருந்தில் பயணம் செய்கிறோம். சுகமான காற்று வீசவே சிறிது கண்ணயர்ந்து விடுகிறோம். சற்று நேரத்தில் விழித்ததும், பக்கத்தில் இருப்பவரிடம் செங்கல்பட்டு வந்துவிட்டதா என்று கேட்கிறோம். செங்கல்பட்டு கால் முளைத்து நடந்து வருமா. என்ன? செங்கல்பட்டு நம்மிடம் வராது: நாம் தான் செங்கல்பட்டிற்குப் போய்ச்

சேருவோம்' வருதலாகிய வினையை நாமல்லவோ செய்ய வேண்டும்: செங்கல்பட்டு செய்யாது!

கொஞ்சம் புரிந்த மாதிரி இருக்கிறதா? கடவுளும், அப்படித்தான், வருதலாகிய வினையைச் செய்யாமலேயே வருவான்: நாம் அவன் இருக்குமிடம் அடைந்தால் அதுவே அவன் நம்மிடம் வந்ததாகக் கொள்ளப்படும். இன்னும் கொஞ்சம் தெளிவாகச் சொல்வதானால், அவன் நம்மிடைமே நமக்குள்ளேயே இருக்கிறான்: அவனை வெளியில் தேடிச் சென்றடைய வேண்டியதில்லை: முடியவும் முடியாது. உள்ளேயே ஒளிந்துள்ளான். நாம் உள்கடந்து பார்த்தால் அவன் புலப்படுவான். வெளியிலிருந்து வரவேண்டிய வேலையில்லாமல், வரும் வினையைச் செய்யாது, உள்ளேயே ஒளிந்துள்ள அவன் காட்சி தருவான். எப்படி?

கண்ணாம்பூச்சி விளையாட்டின் விதிமுறை என்ன? ஒருவனுடைய கண்ணைக் கட்டியவன், கட்டிய பிறகு, கட்டப்பட்டவனின் எதிரிலேயே நிற்கலாம். அல்லது ஒறிந்து கொள்ளவும் செய்யலாம். கட்டப்பட்டவன் கண்ணால் பார்க்க முடியாது. ஆனால் அவனுடைய மற்ற புலன்களுக்கு அந்தக் கண் புலனின் ஆற்றல் அல்லது சக்தி கூடிவிடும் என்பதே நிதரிசனமான உண்மை. உதாரணமாக செவிப்புலனின் சக்தி கொண்டு கூர்ந்து கேட்டு ஒளிந்துள்ளவனைப் பிடித்து விடலாம் அல்லது எதிரிலேயே நின்று கொண்டு ஒளிந்துள்ளவனைப் போலப் போக்குக் காட்டுபவனை எளிதில் பிடித்து விடலாம்.

கண்ணாம்பூச்சி ஆடும் போது கண்களில் கட்டியுள்ள புறக் கட்டை அவிழ்க்காமலேயே கட்டியவனைக் கண்டுபிடிக்க வேண்டியது தான் விளையாட்டின் நோக்கம், இல்லையா? அப்படிக் கண்டுபிடித்துவிட்டால்,கட்டை அவிழ்த்து விளையாட்டை ஒரு முடிவிற்குக் கொண்டு வரலாம். கடவுள் நம்முடன் ஆடும் கண்ணாம்பூச்சியில் அவன்நம் கண்களைச் சுற்றிக் கட்டியுள்ள அகக் கட்டை அவிழ்க்காமலேயே அவனைக் கண்டுபிடிக்க வேண்டும். ஆனால் நம்மில் எத்தனை பேரால் அப்படி இறைவனைப் பிடிக்க முடியும்?இராமகிருஷ்ணர் போன்ற பரமஞானிகளால் முடியலாம். முடியாலாம் என்ன, முடிந்தது! நாமும் பரமஹம்சரைப் போலவே அகப் பார்வையைக் கூர்மையாக்கிக் கொண்டால் இயலும். அகக் கண்ணாகிய புலன் கட்டப் பெற்றுள்ளதால் அப்புலனின் ஆற்றலை

அடக்கி, மடைமாற்றம் செய்து மற்ற புலன்களின் உதவியால் முயல வேண்டும்.

அது முடியுமோ இல்லையோ, ஆனால் இப்போது விராதன் விடுத்த முதற் கேள்விக்கான விடை பிடிபட்டுவிட்டதல்லவா? கடவுள் தீயவர்களைப் போல எங்கோ கண்காணாது ஒளிந்திருக்க வில்லை.கண்ணாம்பூச்சியில் கண்ணைக் கட்டியவன் கண் கட்டப்பட்டவனின் எதிரிலேயே நின்று கொண்டு போக்குக் காட்டுவது போல, நமக்குள்ளேயேதான் ஒளிந்துள்ளான்: ஒளிந்திருப்பது போல பூச்சி காட்டுகிறான் உண்மையில் அவன் ஒளியவில்லை. நம் கண்கள் தான் கட்டப்பட்டுள்ளது. அவ்வளவே!

"Play the Game" என்று சொல்வார்களே அப்படி விளையாட்டை முழு முயற்சியுடன் விளையாடுபவர்களுக்கு, கண்கள் கட்டப்பட்டிருந்தாலும் கட்டியவனைப் பிடிப்பது எளிதாகக் கைக்கூடுமா போல ஒளிந்து விளையாடுபவனான கடவுளும் பிடிபடுவான்: ஒளிந்திருந்தாலும் அகப்படுவான்.

இந்த மாபெரும் பிரபஞ்ச விளையாட்டின் நுணுக்கத்தை, புரியாத புதிரை கம்பநாடன் என்ன எளிதாய் விடுவிக்கிறான், பாருங்கள் !

'வாராதே வர வல்லாய்" என்ற பொருள் புரியாவிட்டாலும் புரிந்தது போலத் தோன்றும் தொடரால், கம்பன் தனக்கே உரிய தனிப்பெரும் கவித்துவ மேதாவிலாசத்தால் முயன்று பெரு வெற்றி ஈட்டுகிறான்.

அன்று தோன்றி இன்று காறும் அறுதியிட்டு விடையிறுக்க முடியாத சிக்கலான வினாவிற்கு... மெய்ஞ்ஞானிகளும், விஞ்ஞானிகளும் இன்னமும் முயன்று கொண்டிருக்கும் வினாவிற்கு... விடை காண (மூலமான வால்மீகியின் ஆதி காவியத்தில் இல்லாத) விராதன் இராமனைத் துதிக்கும் இடத்தைப் பயன்னடுத்திக் கொண்டு விடுகிறான் கல்வியில் பெரிய கம்பநாடன்.

கல்லாத கலையும், வேதக் கடலுமே இல்லையெனும் கவிச்சக்கரவர்த்தியல்லவா கம்பன்?



# தேனும் மீனும்

**ரா. சம்பத்குமார்,**

செயலாளர் -கம்பன் கழகம், புதுக்கோட்டை

கவிச்சக்கரவர்த்தி கம்பன் தனது காப்பியத்தில் பல சொற்களை எடுத்து ஆள்கிறான். ஒரு சொல்லுக்கு எத்தனை பொருள் உண்டு என்று அதனை ஆழப்படிக்கும் போது நாம் வியக்கின்றோம்.

கானகம் செல்ல வந்த ராமனை கங்கைக் கரையில் வேடன் குகன் சந்திக்கிறான். தான் கொண்டு வந்த தேனையும் மீனையும் ராமன் முன் வைக்கிறான்.

"அருந்தியன் தேனும் மீனும் அமுதினுக்கு அமைவது ஆகத் திருத்தினென் கொணர்ந்தேன்" என்றான் குகன். குகன் ராமனுக்கு தேனையும் மீனையும் ஏன் கொடுத்தான்?

1. நீரின் ஆழத்தில் கிடைப்பது மீன். மலையின் உச்சியில் கிடைப்பது தேன். நட்பின் ஆழத்தையும் அன்பின் உயரத்தையும் காட்டுவதற்காகக் கொடுத்தான்.

2. சில நேரங்களில் மலை முகட்டில் இருக்கும் சுனைகளிலும் மீன் உண்டு. பூமிக்கு அடியில் உள்ள பழைய கிணற்றுக்குள்ளும் தேன் உண்டு. இப்போது நட்பின் உயரத்தையும் அன்பின் ஆழத்தையும் காட்டினான்

3. ராமன் எத்தகைய உணவை உண்பான் எனத் தெரியாததால் சைவப் பொருள் தேனையும், அசைவப் பொருள் மீனையும் தந்தான்.

4. சைவப் பொருட்களிலேயே நீண்ட நாள் கெடாதது தேன். அசைவப் பொருட்களிலேயே பதப்படுத்தினால் நீண்ட நாள் கெடாதது மீன். வனத்தில் தங்கும் ராமனுக்கு இவை ஏற்றவை என நினைத்தான்.

5. தேன் தானும் கெடாது தனக்குள் வந்த பொருளையும் கெடவிடாது. மீன் தானும் மணக்கும் தன்னோடு சேர்ந்த பொருளையும் மணக்கச் செய்யும் ராமன் குணம் போல இரண்டு பொருட்களையும் தந்தான்.

6. விருந்து வந்தவன் ராமன். எனவே இனிப்பு ஒன்று (தேன்) காரம் ஒன்று (மீன்) என்று வழங்கினான். (ஸ்விட் காரம் வழங்கி உபசரித்த முதல் உபசரிப்பாளன் குகன்)

7. தேன் ஈக்களும், மீன்களும் கூட்டமாக வாழக் கூடியவை. ராமன் பலரையும் இணைத்துக் கொள்பவன் என்பதற்காக வழங்கினான்.

8. மண்ணில் உள்ள அசுத்தங்களை உண்டு செடி மலர்மூலம் தேனைத் தருகிறது. நீரில் உள்ள அசுத்தங்களை உண்டு மீன் வளர்கிறது. ராமன் அசுத்தங்களைப் போக்குபவன் எனவே வழங்கினான்.

9.கொடுக்கும் உணவில் ஒன்று திடப்பொருளாகவும் ஒன்று திரவப் பொருளாகவும் இருக்கட்டும் என நினைத்து வழங்கினான்.

10. சீதை தாமரை மலரில் இருந்து வந்த திருமகள். எனவே மலரில் உண்டான தேனையும். ராமன் பார்கடலில் இருந்து வந்த பரம்பொருள். எனவே கடலில் உண்டான மீனையும் கொடுத்தான்.

11. காட்டுக்குள்ளும் (தேன்)பின் கடல் கடந்தும் (மீன்) சீதையைத் தேடுவாய் என குறிப்பால் உணர்த்தினான்.

12. புறத்தூய்மை ஏற்படுத்துவது மீன் அகத்'தூய்மை ஏற்படுத்துவது தேன் எனவே வழங்கினான்.

13. தேனும் தேன் கூட்டில் சிறைபடும், மீனும் மீன் வலையில் சிறைப்படும். சீதை சிறைபடப் போகிறாள் என உணர்தினான்.

14. தேன் சிவப்பு, மீன் கருப்பு, சீதை சிவப்பு ராமன் கருப்பு எனவே வழங்கினான்.

15. கிட்கிந்தை மலையில் சுக்கிரவன் (மலையில் கிடைப்பதும் குரங்குக்குப் பிடித்ததும் தேன்) என்ற சகோதரனையும், கடல் கடந்து வீடணன் (அரக்கருக்கு பிடித்தது மீன்) என்ற சகோதரனையும் பெறப் போகிறாய் என உணர்த்தினான்.

16.மலரில் இருந்து தேன் பிரிக்கப்படும். நீரில் இருந்து மீன் பிரிக்கப்படும். ராமனிடம் இருந்து சீதை பிரிக்கப்படுவாள் என உணர்த்தினான்.

17. எல்லா மலரிலும் தேன் உண்டு. எல்லா நீரிலும் மீன் உண்டு. திருமாலும் திருமகரும் எல்லாவற்றிலும் நீக்கமற நிறைந்தவர்கள்.

18. கோதை ஆண்டாள் விரும்பிக் கொடுத்தது தேன் நிறைந்த மலர்களை. பெருமாள் எடுத்தது மச்சாவதாரம் என்ற மீன் வடிவத்தை.

இப்படி ஒரு சொல்லுக்கு எத்தனையோ பொருளை படிப்பவர் மனம் விரிய அமைத்ததனால் தான் கம்பன் கவிச்சக்கரசர்த்தி ஆனான்.

# கம்பராமாயணத்தில் ஊடல்

வாழியூர் **வே. இராசவேலன்**
(செயலாளர் வாழியூர் கம்பன் கழகம்)

பண்டைக்காலத்தில் தமிழர் நிலங்களை குறிஞ்சி. முல்லை, மருதம், நெய்தல் என நான்கு வகையாகப் பிரித்தனர். முதுவேனில் காலத்தில் வறண்ட குறிஞ்சியும் முல்லையும் பாலை என வழங்கி நிலங்களை ஐந்தாக்கினர். ஐந்து நிலங்களுக்கும் ஐந்து ஒழுக்கங்களை உரிப்பொருளாக, உரிமைப் பொருளாக ஆக்கினர்.

*போக்கெல்லாம் பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி*
*ஆக்கஞ்சேர் ஊடல் அணிமருதம் - நோக்குங்கால்*
*இல்இருத்தல் முல்லை இரங்கல் நறுநெய்தல்*
*சொல்லிருக்கும் ஐம்பால் தொகை.*

என்பர் சான்றோர்.

ஊடல் என்பது பொய்க்கோபமாகும். அது பெண்ணுக்கு இயல்பானதாகும்."புலவி, ஊடல், உணர்வு மூன்றும் ஒன்றையொன்று பிரிக்க முடியாத பொருள்கள். காதலர்கள் உள்ளக் கிடக்கையை அப்படியே படம் பிடித்துக் காட்டும் பகுதி இதுவேயாகும்.தலைமக்கள் இருவரக்கும் ஒருவர் பால் ஒருவர்க்குள்ள அன்பு எத்தகையது என்பதைக்காட்டவே நம் முன்னோர் இப்பகுதியை அவ்வளவு மிகைபட விரித்துக் கூறி இருக்கின்றார்கள் என்று தெரிகிறது" என்பர் (தொல்காப்பியர்காலத் தமிழர் பக்கம் 168 -புலவர் குழந்தை)

"தன் அன்புக்கு உரிய பொருள் தனக்கே உரியதாக இருக்க வேண்டும் என்று எண்ணுவது அன்பு நெஞ்சம். கணவனுடைய அன்பு தனக்கு மட்டுமே உரிமையாக இருக்க வேண்டும் என்று விரும்புவது மனைவியின் இயல்பு. அந்த உரிமையில் ஏதேனும் குறையோ ஐயமோ ஏற்படும்போது அதற்காகப் போராடி உரிமையை முழுமையாகப் பெற முயலும் முயற்சியே ஊடல் எனப்படும்" என்பார் டாக்டர் மு.வரதராசனார். ("குறள் காட்டும் காதலர்" பக்கம் 107)

கவியரசராம் கம்பர் தம் காவியத்தில் இத்தகைய சிறப்பான ஊடல் ஒழுக்கத்தினைப் பல பாடல்களில் காட்டி உள்ளார். அவ் அழகிய சுவையுள்ள காட்சியை இவண் காண்போம்.

அயோத்தி மாநகரத்தில் சில பெண்கள் தம் தம் கணவரோடு ஊடல் கொள்கின்றனர். ஊடல் தீர்ந்து அவர்களோடு கூடுகின்றனர். அவ்ஊடலும் கூடலும் எவ்வாறு நிகழ்கின்றன என்று கம்பர் படம் பிடித்துக் காட்டுகிறார்.

ஊடல் கொண்ட மகளிர் தாம் சூடியிருந்த மலர் மாலைகளைக் கழற்றித் தெருவிலே எறிகின்றனர். அம்மாலைகள் வீதி வழியே செல்லும் குதிரைகளின் குளம்புகளிலே சிக்கிக் கொள்கின்றன. அப்பெண்கள் ஊடல் தணிந்த பின் தமது கணவரைத் தழுவச் செல்கின்றனர். கணவரை நேரே தழுவுவதற்குச் சந்தனம் தடையாக இருக்கின்றது. ஆகவே அச் சந்தனத்தை வழித்து எறிகின்றனர். அவ்வாறு வழித்து எறிந்த அச்சந்தனச் சேறு தெருவிலே செல்பவர்களை வழுக்கி விழச் செய்கின்றது. இதனை ஆசிரியர்

*ஆடுவார் புரவியின் குரத்தை ஆர்ப்பன*
*சூடுவார் இகழ்ந்த அத்தொங்கல் மாலைகள்*
*ஓடுவார் இழுக்குவது ஊடல் ஊடுஉறக்*
*கூடுவார் வனமுலைக் கொழித்த சாந்தமே* (148)

என்று பாடுவார்.

தயரதனும் சேனைகளும் திருமணத்திற்குப் புறப்படுகின்றனர். வழியில் சந்திரசைலம் என்னும் மலையின் சாரலில் தங்குகின்றனர். மந்தார மாலைகள் அம்மலையெங்கும் சிதறிக் கிடக்கின்றன. மலையினிலே மாலைகள் வந்த விதம் என்னவோ! தேவமாதர்கள் எறிந்த மாலைகளே அவை!

தேவ மாதர்கள் தம் கணவருடன் ஊடல் கொள்கின்றனர். அவர்கள் கண்கள் சிவக்கின்றன. கண்கள் சிவந்ததால் கண்களில் தீட்டியிருந்த மை உருகுகின்றது. மை உருகி கண்களில் விழுவதால் கண்ணீர் வழிகின்றது. சினத்தினால் கூந்தலில் சூடியிருந்த மாலைகளை எடுத்து எறிகின்றனர். அவ்வாறு வீசப்பட்ட மாலைகள் தாம் அம்மலையெங்கும் குவிந்து கிடக்கின்றன.

அம்மகளிர் கழற்றி எறிந்த மணி, மாலை முதலியவைகளை ஆண் குரங்குகள் எடுத்து அணிந்து கொள்கின்றன. அதனைப் பெண் குரங்குகள் கண்டு களிப்படைகின்றன.

*ஆடவர் ஆவி சோர அஞ்சன வாரி சோர*
*ஊடலின் சிவந்த நாட்டத்து உம்பர்தம் அரம்பை மாதர்*
*தோடு அவிழ் கோதை நீன்றும் துறந்த மந்தார மாலை*
*வாடல் நறவு அறாது வயின்வயின் வயங்கும் மாதோ* (853)

ஒரு பெண் பூப்பறிக்க விரும்புகின்றாள். கைக்கு எட்டிய சில கொம்புகள் வளைந்து நிற்கின்றன. சில கைக்கு எட்டாமல் வளைந்து

கொடுக்காமல் நேராக நிற்கின்றன. இதனைக் கண்ட தேரெழுந்தூர் கவிஞருக்கு கைக்கு எட்டிய பூங்கொடிக்கு ஆடவரோடு புணர்ந்த மகளிரும் கைக்கு எட்டாமல் நின்ற பூங்கொடிக்கு ஆடவருக்கு இணங்காமல் ஊடல் கொண்டு நிற்கும் மகளிரும் நினைவுக்கு வருகின்றனர். எண்ணம் எழுத்தாணி முனைக்கு வருகின்றது.

*உலம்தரு வயிரத் திண்தோள்*
*ஒழுகி வார்ஒளி கொள்மேனி*
*மலர்ந்த பூந்தொடையல் மாலை*
*மைந்தர்பால் மயிலின் அன்னார்*
*கலந்தவர் போல ஒல்கி*
*ஒசிந்தன சிலைகை வாரஸ்*
*புலந்தவர் போல நின்று*
*வளைகில பூத்த கொம்பர்* (899)

அதோ ஒரு வீரன். போர் என்று கூறிய அளவில் பருத்துப் புடைக்கும் தோள்களை உடையவன். காமன் போன்ற கட்டழகு மிக்கவன். அவன் மலர் கொய்து கொண்டு இருக்கிறான். அவனுடைய காதலி அவனை அறியாமல் பின் புறமாக அன்னமென நடந்து அவன் கண்களைமூடுகின்றாள். அவ் ஆடவன் திடுக்கிட்டு 'யார்?' என்று வினாவுகின்றான். தலைவிக்கு அவ் வினாவில் ஐயம் எழுகின்றது. நம்மையன்றி இவன் கண்களை மூட உரிமையுடையோர் யார் இருக்கின்றார்? இவன் கண்களை மூடுவதற்கு எனக்கு அன்றி வேறு ஒருத்திக்கும் உரிமை உண்டு போலும் என்று நினைத்து நெருப்பு போல வெப்பமாக மூச்சு விடுகின்றாள்.

*போர் என்ன வீங்கும் பொருப்பு அன்ன பொலங்கொள் திண்தோள்*
*மாரன் அனையான், மலர்கொய்து இருந்தானை, வந்துஓர்*
*கார்அன்ன கூந்தல், குயில்அன்னவள், கண் புதைப்ப,*
*'ஆர்?' என்னலோடும், அனல்என்ன அயிர்த்து உயிர்த்தாள்.*
(907)

ஊடல் கொள்ளும் தலைவி ஒருத்தியை வள்ளுவர் நமக்குக் காட்டுகிறார். காதலன் தன் காதலியிடம் மற்ற எல்லாரையும் விட உன் மேல்தான் எனக்குக் காதல் உண்டு என்கிறான். உடனே காதலி, 'இன்னும் பலரிடத்தில் பழக்கம் உமக்கு உண்டோ? அவர்களைவிட என்மேல் காதலா? யார் யாரை விட என்மேல் காதல்? அவர்கள் யார் யார்? என்று ஊடுகின்றாள்.

*யாரினும் காதலம் என்றேனா, ஊடினாள்*
*யாரினும் யாரினும் என்று* (1314)

இவ் வள்ளுவர் வாய்மொழிதான் கம்பருடைய கருத்துக்கு ஆணிவேர் என்றால் அது மிகையாகாது.

மன்னன் ஒருவன், மனைவியரோ பலர். ஒரு நாள் மனைவியருள் ஒருத்தியின் அருகில் அமர்க்திருக்கின்றான். அவள் அழகிலே இரதிதேவி. அவள் கண்களோ மார்பினை ஊடுருவிச் செல்லக் கூடிய வேல் போன்றது. அக் கண்களில் மைதீட்டி இருந்தாள். மன்னன் வேறு ஒருத்தியின் பெயரைச் சொல்லி அழைத்துவிட்டான். அது கேட்ட மங்கை நல்லாள் கண்ணிர் பெருக்கினாள். தன்னுடைய நிலையைப் பிறர் அறியாமல் இருக்க வேண்டும் என்று எண்ணுகின்றாள். தன் கையில் உள்ள மலரை முகர்ந்த வண்ணம் குனிந்து நிற்கின்றாள். அவளுடைய உள்ளக் கொதிப்பினால் அம்மலர் கருகிப் போயிற்றாம். இதனைக் கம்பர்.

*தைக்கின்ற வேல்நோக்கினாள் தன்உயிர் அன்ன மன்னன்*
*மைக்கொண்ட கண்ணாள் எதிர் மாற்றவள் பேர்விளம்ப*
*மெய்க்கொண்ட நாணம்தலைக் கொண்டிட விம்மி மென்பூக்*
*கைக்கொண்டு மோந்தாள் உயிர்ப்புண்டு கரிந்தது அன்றே* (909)

என்றுபாடுகின்றார்.

ஒரு வீரனது தோளில் ஒருத்தி செஞ்சந்தனக் குழம்பு கொண்டுகோலம் எழுதினாள். நீர் விளையாடலின் போது சந்தனம் கரைந்துவிட்டது. அச் சந்தனம் அழிந்த நிலையில் அவனை அப்பெண் பார்க்கின்றாள். 'வேறு ஒரு பெண்ணுடன் உறவாடியதால் இவன் தோளில் நான் எழுதிய சந்தனக் கோலம் அழிந்தது' என ஊடல் கொள்கிறாள். அதனால் அவள் சேயரிக் கருங்கண்கள் சிவக்கின்றன.

*பாய்அரித் திறலான் பசுஞ் சாந்தினால்*
*தூயபொன் புயத்துப் பொதி தூக்குறி*
*மீ அரித்து விளர்க்க ஓர் மெல்லியல்*
*சேயரிக் கருங்கண்கள் சிவந்தவே* (951)

'செஞ்சந்தனக் கோலம் நீங்கியதனால் தோள்கள் தனது வெண்ணிறத்தையடைந்தன. வெண்ணிறக் கண்கள் செஞ்சந்தனம் அணிந்த அந்தத் தோள்களின் செந்நிறத்தைக் கொண்டன' என நயம் கூறுவர் சான்றோர் (வை.மு.கோ. உரை பாலகாண்டம் பக்கம் 747)

ஒருத்தி ஊடல் கொண்டாள். ஊடலை விடக் கூடல் விருப்பம் அதிகமாயிற்று. தானே தன் கணவனைச் சென்று அணைப்பதற்கு நாணிப் பொய் உறக்கம் கொள்கின்றாள். கனவில் அஞ்சியவள் போன்று அருகிலிருந்த கணவனைத் தழுவிக் கொள்கின்றாள்.

*துனிஉறு புலவியைக் காதல் சூழ்சுடர்,*
*பனிஎன, துடைத்தலும் பதைக்கும் சிந்தையாள்,*
*புனைஇழை ஒருமயில், பொய் உறங்குவாள்,*
*கனவுஎனும் நலத்தினால் கணவற் புல்லினாள்* (1025)

அரக்கியர் சிலர் தமது கணவரும் தாமும் ஒரு படுக்கையில் படுக்கின்றனர். கூடல் இன்பம் சிறக்க தமது கணவரிடத்து ஏதேனும் ஒரு குற்றத்தைக் கூறிச் சிறிது விலகித் தனியே படுத்துக் கொண்டு, உறங்குவார் போன்று இருக்கின்றனர். அவ்வாறு பொய் உறக்கம் கொண்டு இருக்கையில் அவரது மனம் கலவியை நாடுகின்றது. அகத்தில் புலவி தணிகின்றது. தம் கணவர் ஊடலைத் தீர்ப்பதற்கு முயல்கின்றனரா என்று நோக்கக் கருதி அவர் அறியாத வண்ணம் கண் திறந்து பார்க்கின்றனர்.

*பள்ளியில் மைந்தரோடும் ஊடிய பண்பு நீங்கி*
*ஒள்ளிய கலவிப் பூசல் உடற்றுதற்கு உருத்த நெஞ்சர்*
*மெள்ளவே இமையை நீக்கி அஞ்சன இழுது வேய்ந்த*
*கள்ள வாள்நெடுங்கண் என்னும் வாள் உறை கழிக்கின்றாரை*
(4951)

'ஊடுதல் காமத்திற்கு இன்பம்' என்றார் வள்ளுவப் பெருந்தகை. அத்தகைய ஊடலைக் கம்பர் தன் காவியத்தில் ஆங்காங்கே புகுத்தியுள்ளார். அதனைச் சுவைத்து இன்புறுவோமாக



# ஒப்பாரும் மிக்காருமில்லாக்கம்பர்

– லயன். மரு. மு கள்ளழகர்
கண்ணமங்கலம்.

இது கம்பன் எழுதாத கற்பனை; உன் காதோடு யார் சொன்னது?என்று கவிஞர் ஒருவர் திரைப்படத்தில் பாடல் எழுதியருப்பார்.இதிலிருந்தே கம்பனை விஞ்சி ஒரு கற்பனையை யோசிப்பது என்பது இயலாது என்று தெரிந்திருந்தும், புண்ணுக்குபுனுகு தடவுவது போனுற ஒரு சமாதான வார்த்தை போன்றது தான் மேற்க் குறிப்பிட்டிருக்கும் பாடல் வரிகள் என்பதை அறியலாம். கம்பனுடைய கற்பனை விஞ்சியது என்று சொல்லும் போது, இராமனுடைய அழகை விவரிக்கும் போது அவருடைய பல்லழகை, முத்துப்பற்களோ!, முழுநிலவின் துண்டங்களோ? என வருணிப்பார். முத்துப்பற்கள் என்பது பழையகாலச் சிந்தனை போலத் தோற்றம் தரும். ஆனால் முழு நிலவின் துண்டங்களோ என்பது இப்போதைய புதுக்கவிதை சிந்தைனையாளர்களையே திணறடிக்கக் கூடிய ஒரு கற்பனை. இதையொட்டி தான் ஒரு கவிஞர் வெட்டி போட்ட நகங்களெல்லாம் குட்டி குட்டி நிலவாய் தெரியுதடி! எனப் பாடியிருப்பார்.

**வான்மீகியும் கம்பரும்:**

வான்மீகி சொல்லாதவற்றை விளக்கி அழகுபடுத்துவதிலும் கம்பருக்குச் சிறப்பு உண்டு. வான்மீகி சொன்னவற்றையே புதிய அழகோடு விளக்கிக் கூறுவதிலும் கம்பருக்குச் சிறப்பு உண்டு. மருத நிலத்தை வருணிக்கும் போது,

*தண்டலை மயில்க ளாடத்,*
*தாமரை விளக்கந் தாங்கக்,*
*கொண்டல்கள் முழவி னேங்கக்,*
*குவளைக்கண் விழித்து நோக்கத்,*
*தென்டிரை யெழினி காட்டத்,*
*தேம்பிழி மகர யாழின்,*
*வண்டுகள் இனிது பாட,*
*மருதம் வீற்றிருக்க மாதோ.* (33)

என்று ஒரு நாடக அரங்கை நம்முன் கொண்டுவந்து நிறுத்துகிறார்.

*கோசல நாட்டு வளமான வாழ்வை*

*வண்மை யில்லைஓர் வறுமை இன்மையால்:*

*திண்மை யில்லைஓர் செறுநர் இன்மையால்:*

*உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்:*

*வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால்* (84).

என்று கூறுவது, பொதுவாக நாட்டின் எதிர்காலத்தைப் பற்றிப் பல நூற்றாண்டுகளுக்கு முன் ஒரு பெரும் புலவர் கண்ட ஒப்பற்ற கற்பனைக் காட்சியாகவும், ஒருநல்ல நாடு இப்படித்தான் இருத்தல் வேண்டும் என்று அரசியல் ஞானி ஒருவர் வகுத்த நல்ல இலக்கணமாகவும் உள்ளது.

'எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வம் எய்தலாலே, இல்லாரும் இல்லை உடையாரும் இல்லை' என்று கூறும் கம்பர் ஒரு பொதுவுடைமைச் சமுதாயத்தையே எங்கும் காண வேண்டுமென்ற எண்ணத்தை உருவாக்கியிருக்கிறார்.

**சுவை பட விளக்குதல் :**

கதையொடு நிகழ்ச்சிகளை விளக்குவதிலும் கம்பர் இணையற்றவராய் விளங்குகிறார். கதைப் போக்கிற்கும் பாத்திரத்திற்கும் இயைந்த வகையில் வளமான சந்தங்களைக் கம்பர் தம் காப்பியத்திலும் வாரியிறைத்துள்ளார். இராமனின் உள்ளத்தைக் கவரும் எண்ணத்துடன் வரும் சூர்ப்ப நகையின் ஒயிலான நடையும் கவர்ச்சி தரும் மயக்கத்தையும் விளக்கும் பாட்டு :

*பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவம் அனுங்கச்*

*செஞ்செவிய கஞ்சநிகர் சீறடியள்; ஆகி*

*அஞ்சொலிள மஞ்ஞையென அன்னமென மின்னும்*

*வஞ்சியென நஞ்சமென வஞ்ச மகள் வந்தாள்* (2762)

தமிழ் மொழியின் வளத்தை முழுமையாகப் பயன்படுத்திய கம்பர் என்று கூறலாம். உரையாடல்களும் காட்சிகளை அமைக்கும் திறமும் நாடகச் சுவை நிறைந்தனவாக உள்ளன. கம்பரின் தமிழ் நடை ஒப்பற்ற அழகு உடையது.

பாத்திரங்களை மனிதப் பண்புடன் பேச வைத்து உணர்ச்சிகளைப் பெருகி ஓடவிட்டுப் பாத்திரப் படைப்பில் உலகப் பெருங்கவிஞருள் ஒருவராய்த் திகழ்கிறார். பாத்திரத்தின் தனித்தன்மையை நுட்பமுற ஒரே பாட்டில் சுருக்கியும் காட்டுவார். ஓராயிரம் பாட்டில் பெருக்கியும் காட்டுவார். இதனால் தான் ஒப்பாரும் மிக்காருமில்லாக் கவிஞராகக் கம்பர் மிளிர்கிறார்.

# கம்பனின் உவமை நயம்

**எஸ். உமாதேவி,** தி.மலை.

**நுழைவாயில் :**

கம்பராமாயணம் - தமிழ்க்காப்பியங்களில் முதலிடத்தில் வைத்து போற்றப்படுவது. 'கல்வியிற் பெரியவர் கம்பர்' -என்ற படி கம்பரின் காப்பியம் கல்விப் பெருங்காப்பியமாகத் திகழ்கிறது.

புவிச்சக்கரவர்த்திகள் போற்றும் கவிச்சக்கரவர்த்தி கம்பர், தமிழன்னையின் தவப்புதல்வராகிய கம்பர் எழுதிய கம்பராமாயணம் - பல சிறப்புகளை தன்னகத்தே கொண்டது. தனக்கென ஒரு வழி வகுத்துக் கொண்டு - பிற காப்பியங்கள் எதனுடனும் ஒப்புமை கூற முடியாதபடித் தனித்து விளங்கும் வண்ணம் இதனைக் கம்பர் எழுதி உள்ளார்.

கம்பராமாயணம் தமிழ் உள்ளளவும் இராமனின் அழகைச் சுவைக்க வழிவகுத்துள்ளது. இதனைப் படிக்க படிக்க பரவசம். இது நமக்கு கிடைத்த வரப்பிரசாதம் இதன் பெருமையை, எழுத்தால் சொல்லால் வரம்பிட்டு வகுக்க இயலாது. ஓசையாலும் சொல்வளத்தாலும், கற்பனையாலும், உணர்ச்சியாலும், ஓட்டத்தாலும் இராமாயணம் தலைசிறந்து மிளிர்கிறது. கதை மாந்தர் பண்புகளை படிக்க படிக்க நமக்கு ஓர் தெளிவு .... இராம அவதார மகிமையை அறிய வாய்ப்பு.

கம்பன் சொல்நயத்தாலும்- சொல்லாட்சித் திறத்தாலும், பொருள் நயத்தாலும் - பொருட்சிறப்பாலும், சந்த நயத்தாலும் சந்த யாப்பாலும், கற்பனை நயத்தாலும் கற்பனை வளத்தாலும் இன்னும் பலவற்றாலும் தன்னேரில்லாக் கவிஞனாக- கவிச்சக்கரவர்த்தியாக அன்றும் இன்றும் என்றும் உயர்ந்தோங்கி நிற்கும் கம்பன் உவமை நயத்தாலும் - உவமை வளத்தாலும் ஈடு இணையற்று நிற்கின்றார் என்றால் அது மிகையில்லை. அத்தகைய கம்பன் உவமை வளத்தை எவ்வாறு நமக்குப் படம் பிடித்துக் காட்டுகின்றார் என்பதை சில உவமைகள் மூலம் காணலாம்.

**பொருள் வாயில் :**

கம்பன் தானியற்றி அருளிய இராமாயணத்திற்கு இராம அவதாரம் என்னும் பெயரை வைத்தார். அந்த இராமன் எத்தகைய இராமன் என்பதைக் குற்றமற்ற வெற்றியையுடைய இராமன் -என்று

கூறியுள்ளார். அத்தகைய இராமபிரானின் கதையை நான் ஆசையால் சொல்லுகிறேன் என்கிறார். இதனை,

'ஓசையோடு உயர்ந்த பாற்கடலை அடைந்த ஒரு பூனை, அந்தப் பாற்கடலை முழுதும் நக்கிக்குடித்து விடுவேன்'! என்று எண்ணி முற்பட்டதைப் போல நான் இராம கதையை எழுத முற்படுகிறேன் என்கிறார். மேலும்,

'ஆசை பற்றி அறைய லுற்றேன்' –என்கிறார். பாயிரத்தில் அவையடக்கத்திலேயே உவமை வளத்தைக் கையாண்டுள்ளார்!

**வெண்ணிற மேகம் :**

வெண்மை நிற மேகம் கடலில் மேய்ந்து கருநிற மேகமாக, மழை மேகமாக மீண்டு வந்தது. இது இயற்கை நிகழ்ச்சி. இதனை,

சிவபெருமான் சிவந்தவன், ஆனால் அவன் திருமேனி முழுதும் திருநீறு பூசிக் கொண்டால் அவன் வெண்ணிறமானவன் ஆகிவிடுவான். அவனை வெண்ணிற மேகத்திற்கு உவமையாக்கினார். வெண்ணிற மேகம் கடலில் மேய்ந்து கருநிறமானதற்குத் திருமாலை உவமையாக்கினார். இந்த உவமையை மேலும் வளமுடையதாக்கி,

*நீறு அணிந்த கடவுள் நிறத்தவன்*

*ஆறு அணிந்து சென்று ஆர்கலி மேய்ந்து ....*

என்றும் சைவத்திற்கும், வைணத்திற்கும் ஒரு பாலம் அமைத்து பாடுகின்றார்.

**கூற்றுவன் உவமை :**

விசுவாமித்திர முனிவர் தசரதனிடம் வந்து நான் வேள்வி நடத்த உள்ளேன். அவ்வேள்வியை அரக்கர் அழிக்க முற்படும் பொழுது அவ்வேள்வியைக்காக்க,

"நின் சிறுவர் நால்வரினும் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி" என்று கேட்டார். அது எவ்வாறு இருந்தது என்பதை 'உயிரை வாங்குகின்ற கொடுமையான கூற்றுவனை விடத் துன்பமான சொற்களால் சொன்னான்' – என்றார்.

மேலும்

மார்பில் எறிவேல் செய்த புண்ணின் துளையில் நெருப்பை நுழைத்தது போல் இருந்தது என்கிறார். இதனை

மருமத்தின் எறிவேல் பாய்ந்த

*புண்ணிலாம் பெரும் புழையில் கனல் நுழைந்தாலெனச் செவியில் புகுதலோடும்*

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

**கண் உவமை :**

விசுவாமித்திரருடன் இராமனை அனுப்ப தசரதன் விரும்பவில்லை. இராமனுக்கு ஏதேனும் ஆபத்து ஏற்படுமோ என அஞ்சினான் இதனை

கண் இலான் பெற்று இழந்தான் என உழந்தான் -என்ற மிகப் பொருத்தமான உவமையால் குறிப்பிடுகின்றார்.

**செந்தாமரை உவமை :**

தசரதன் இராமனிடம் 'உனக்கு முடிசூட்டு விழா' -என்றவுடன் இராமனுடைய முகம் தாமரை போன்று இருந்தது

'நீ காட்டிற்குச் செல்' -பரதன் நாடாள வேண்டும் என்றதும் இராமனின் முகம் அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா !

*என்று தன் உவமை வளத்தை எடுத்துக்காட்டியுள்ளார்.*

இவ்வாறு இக்காப்பியம் முழுவதிலும் கம்பரின் உவமை வளத்தை எடுத்துக்கூறிக் கொண்டேபோகலாம்.

காப்பியம் முழுதும் வாழ்வியல் கூறுகள் ! அவைகளை உவமைகளுடன் கூறும் பாங்கு நம் நெஞ்சில் பசுமரத்தாணி போன்று பதிகிறது.

**இறுதி வாயில் :**

யாமறிந்த புலவர்களிலே கம்பனைப்போல் வள்ளுவர்போல் இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்ஙனுமே கண்டதில்லை - என்கிறார் முண்டாசுக் கவிஞர் பாரதி.

தமிழ்ச் சமுதாயத்தில் வாழ்வியல், அரசியல் என்ற இரண்டிலும் அவன் பல புதுவழிகளை காட்டி இருப்பதை காப்பியம் முழுதும் காண முடிகிறது.

எல்லா காப்பியத்தையும் விட இராமாயணத்தில்தான் பாத்திரங்கள் மிகுதி. உலகத்திலே மனிதனாகப் பிறந்தால் இராமனைப்போல் வாழ வேண்டும் -என்ற எண்ணத்தை விதைப்பது இராமாயணம்.

என்றும் இனிக்கும் இன்சுவை இராம கதையை

போற்றுவோம் ! வாழ்த்துவோம் !! வணங்குவோம் !!!

# அனுமன் பெற்ற சீரஞ்சீவி பட்டம்

## ஆ.குருசாமி, அத்திமூர்

புவியரசர்கள் எல்லாம் போற்றும் கவியரசர் கம்பர். கங்கைக்கும்,இமயமலைக்கும் இணை இல்லையோ அது போல கம்பருக்கு இணை எவருமிலர்.கம்பன் வால்மீகியின் கதையைத் தழுவி தமிழிலே இராமாயணம் எழுதினார்.அவர் அக்கதைக்கு முதலில் வைத்த பெயர் இராமாவதாரம் என்பதாகும்.பின்னர் அது கம்பராமாயணம் என்று ஆயிற்று.

சிற்றன்னை கைகேயி தயரதனிடம் பெற்றவரத்தால் இராமன் 14 ஆண்டுகள் சீதையோடும், இலக்குவனோடும் காடு செல்ல புறப்பட்டான். கங்கைக் கரையில் குகனைச் சந்தித்து அவனை சகோதரனாக ஏற்றுக் கொள்கிறான்.

ஆரண்யத்தில் முனிவர்களைச் சந்தித்தாள்.அவர்கள் துயரங்கேட்டு அதனைப் போக்குவதாக உறுதி அளித்தாள்.

பஞ்சவடியில் இருந்த போது இராவணன் வஞ்சனையாக சீதையைக் கவர்ந்து சென்று இலங்கையில் அசோக வனத்தில் சீதையை சிறை வைத்தான்.

சீதையைக் காணாத இராமன் துயரடைந்தான்.கவந்தனைக் கொன்று அவன் சொல்ல சுக்கீரவனைத் துணை கொள்ள செல்கிறாள்.வழியில் சபரியைக் கண்டான்.சபரியும் சீதையைத் தேட சுக்ரீவன் துணை இருப்பான் என்று கூறி சுக்ரீவனைத் துனை கொள்ளச் சொல்கிறாள்.

இராமன் அனுமன் உதவியோடு சுக்ரீவன் நட்பைக் கொண்டான்.கவிக்குல அரசனின் துன்பம் கேட்டு இராமன் கொதித்து எழுந்தான்.வாலியைக் கொல்வேன் என உறுதி எடுத்தான்.வாலியைக் கொன்றாள்.

வாலி இறந்ததும் சுக்ரீவனுக்கு இராமன் முடிசூட்டினான். கிட்கிந்தை அரசன் சீதையைத் தேட வானரர்களை நான்கு பக்கமும் அனுப்பினான்.தென்திசைக்கு அங்கதன் தலைமையில் ஒரு படை புறப்பட்டது.அக்கூட்டத்தில் அனுமனும் அங்கம் வகித்தான்.

எங்கு தேடினும் சீதையைக் காணவில்லை.அனைவரும் அனுமனிடம் இலங்கை செல்லும் படி கூறினர்.

அனுமன் மகேந்திர மலை மீது ஏறி பறந்து சென்று இலங்கையில் குதித்தான்.பல இடங்களில் சீதையைத் தேடியும் சீதையைக் காணவில்லை.கடைசியாக சீதையை அசோகவனத்தில் கண்டான்.

அம்மையைக் காணப்போகும் நேரத்தில் இராவணன் அங்கு வருகிறான். சீதையிடம் தகாத வார்த்தைகளைக் கொட்டினான் இதையெல்லாம் அனுமன் மறைந்திருந்து கேட்கிறான்.

இராவணன் சென்றதும் சீதை தற்கொலை செய்துக் கொள்ள முயன்றாள்.

கண்டனன் அனுமனும் கருத்தும் எண்ணினான் கொண்டனள் துணுக்கம், மெய்தீண்டக் கூசுவான் அண்டர் நாயகன் அருள்தூதன் யான் என்று அவள் முன்னே தோன்றினான்.

சீதை ஐயுற்றாள் பின்னர் தெளிந்து, அரக்கனே ஆக: வேறு ஓர் அமரனே ஆக:அன்றிக் குரங்கு இனத்து ஒருவனே தான் ஆகுக! இங்கு வந்து எம்பினான் நாமம் சொல்லி எனக்கு உயிர் தந்தான் என நினைத்து சீதை அவனிடம் பேசுகிறாள்.

அனுமன் தன் வரலாறு கூறினான். இராமன் அனுப்பியதாகக் கூறி அடையாளங்களை அவளிடம் எடுத்து உரைத்தான்.இராமன் கொடுத்த மோதிரத்தை சீதையிடம் அனுமன் காட்டினான்.

மோதிரத்தைக் கண்ட சீதை, இழந்த மணி புற்று அரவு எதிர்ந்தது எனல் ஆனாள். பழந்தனம் இழந்தன படைத்தவரை ஒத்தாள்; குழந்தையை உயிர்த்த மலடிக்கு உவமை கொண்டாள் ;

மோதிரத்தை வாங்கி மகிழ்ந்தாள். அனுமனை வாழ்த்தினாள்.

*வாழிய பனைத்தோள் வீர*

*துணை இலேன் பரிவு தீர்த்த*

*வாழிய வள்ளலே! யான்*

*மறுஇலா மனத்தேன் என்னின்*

*ஊழி ஓர் பகலாய் ஓதும்*

*யாண்டு எல்லாம் உலகம் ஏழும்*

*ஏழும் வீவுற்று ஞான்றும்*

*இன்று என இருத்தி என்றாள்* (5299)

நமக்கு 360 ஆண்டுகள் தேவர்களுக்கு ஒரு வருடம்.அது போல தேவ ஆண்டுகள் 4000 இதற்குக் காலை 400, மாலை 400 ஆக 4800. கிரேதாயுகம். அதே போல தேவ ஆண்டுகள் 3000 இதற்குக் காலை 300, மாலை 300 ஆக 3600. இது திரேதாயுகம்.இதே போல தேவஆண்டுகள் 2000 இதற்குக் காலை200, மாலை200 ஆக 2400 ஆண்டுகள் இது துவாபரயுகம்.இது போல தேவ ஆண்டுகள் 1000 இதற்குக் காலை100, மாலை100 ஆக 1200 ஆண்டுகள் இது கலியுகம்.இவையெல்லாம் சேர்ந்து நான்குயுகங்களுக்கும் 12000 ஆண்டுகள். இது ஒரு சதுர்யுகம். இது போல் 1000 சதுர் யுகமானால் பிரம தேவருக்கு ஒரு பகல். இதை ஒரு ஊழி என்றும் சொல்லுவார்கள். ஒரு சிலர் கல்பம் என்றும் சொல்லுவர்கள். இது போல் இன்றும் ஒரு 1000 சதுர்யுகம் பிரம்ம தேவருக்கு ஒரு இரவு.இந்த இரவும் பகலும் சேர்ந்து நாளாகி, மாதமாகி,வருஷமாகி அந்த வருஷங்கள் 100 ஆனால் பிரம்மனின் ஆயுள் முடிந்து இந்த உலகங்கள்அத்தனையும் அழிந்தாலும் நீ மட்டும் அழியாமல் இரு என்று சீதை அனுமனுக்கு சிரஞ்சீவி பட்டம் வழங்கினாள்



# ஏன்? ஏன்? ஏன்?

-.இராச. பேரரசு, வாழியூர்.

தயரதனிடம் நின் சிறுவர் நால்வரிலும் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி எனக் கேட்டு அழைத்து வந்த விசுவாமித்திரன் மீண்டும் எங்கு அழைத்து வந்தானோ அங்கேயே கொண்டு விடவேண்டும் அல்லவா! இதனைப் பற்றி இவண் ஆராய்வோம்.

தசரதன் வழக்கம்போல் அன்றும் கொலு வீற்றிருந்தான் அப்பொழுது, மடங்கல்போல் மொய்ம்பினான், முன்னர் மன்னுயிர் அடங்கலும் உலகம் வேறு அமைத்து தேவரோடு இடம்கொள் நான் முகனையும் படைப்பென் ஈண்டு எனத் தொடங்கிய முனி உறு முனிவனான விசுவாமித்திர முனிவர் அங்கு வந்தார்.

தசரதன் அவரைக் கண்டு எழுந்தான், சென்றான், அவரைப் பணிந்தான். மணிகளால் அமைக்கப்பெற்ற பொன் அரியணையில் அவரை அமர வைத்தான். அவருக்குச் செய்ய வேண்டிய வழிபாடுகளையெல்லாம் செய்தான்

மன்னன் முனிவரிடம் 'தாங்கள் இங்கு எழுந்து அருளியது நான் செய்த நல்வினையாகும்' என்று கூறி மீண்டும் பணிந்தான்

அப்பொபது முனிவர் தயரதனைப் புகழ்ந்து பாராட்டினார் நமக்கு எந்த வேலையாவது முடிய வேண்டுமானால் அவரை இந்திரனே சந்திரனே உங்களாப் போல் ஒருவர் இப்பூவுலகில் உண்டா! உங்களைப் போல் வாரிவழங்கக் கூடியவர்கள் யார் இருக்கிறார்கள்! உங்களைப் போல் கருணை உள்ளம் கொண்டவர்கள் யார் இருக்கிறார்கள் என்றெல்லாம் இப்பொழுது புகழ்ந்து பேசுகிறோம் அல்லவா? இதற்கு வித்திட்டவர் விசுவாமித்திரர்.

விசுவாமித்திரர் தசரதனிடம், 'தருவனத்துள்யான் இயற்றும் தவவேள்விக்கு இடையூறா தவம் செய்வோர்கள் வெருவரச் சென்று அடர்காம வெகுளி என நிருதர் இடை விலக்கா வண்ணம் செருமுகத்துக் காத்தி என நின் சிறுவர் நால்வரினும் கரியசெம்மல் ஒருவனைத் தந்திடுதி' என உயிர் இரக்கும் கொடுங்கூற்றின் உளையச் சொன்னாள்.

தயரதன், முனிவர் இராமனைத் தான் கேட்கிறார் என புரிந்து கொண்டான். இராமனை அனுப்ப அவனுக்கு மனம் இடம் தரவில்லை காரணம்? இராமன் அவன் உயிராக இருந்தான். தயரதன் நிலை

கண்ட அவன் குலகுரு வசிட்டர், 'உம்முடைய மகனுக்குப் பெருமை எய்தவிருக்கும் இந்த நேரத்தில் இராமனை அனுப்புவதற்குத் தயங்கலாமோ? அவனுக்குப் பலகலைகளின் பயிற்சி உண்டாகும் காலம் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இராமனை இம்முனிவருடன் அனுப்ப வேண்டியது உன் கடமை' என்றார்.

ஆசிரியர் வாக்கினை வேதவாக்காகக் கொண்ட தயரதன் இராமனை அனுப்ப இசைந்தார். இராம இலக்குவரை வரவழைத்த அரசன் முனிவரிடம் அவர்களை ஒப்படைத்து, 'இவர்க்குத் தாயும் நீயே தந்தையும் நீயே' என்றார்.

இராமன் உடைவாளை இடையிலே கட்டினான் ஒரு தோளிலே அம்பறாத் தூணியை மாட்டினான். மற்றொரு தோளிலே வில்லினைத் தாங்கினான். இலக்குவனுடன் முனிவரைத் தொடர்ந்தான்.

முனிவருடன் சென்ற இராமன் தவத்திற்குத் தடையாய் இருந்த தாடகையைக் கொன்றான். முனிவரின் வேள்வியைக் காத்தான்.

வேள்வி முடிந்த பின் மூவரும் மிதிலை நோக்கிப் புறப்பட்டனர் மிதிலையின் மதிற் புறத்தே அகலிகை கல்லாய் கிடந்தாள்.அக்கல்லின் மீது இராமனின் கால்துகள்பட அக் கல் பெண்ணாய் ஆனது.அகலிகைக்கு இராமன் மறுவாழ்வு தந்தான்.

பின்னர் மூவரும் மிதிலையை அடைந்தனர். அரண்மனையின் மேல் மாடத்தே இருந்த சீதையின் கண்களும் இராமனின் கண்களும் சந்தித்துக் கொண்டன. இருவர் உள்ளமும் இடம் மாறியது. மூவரும் தங்கள் இடம் சென்றனர்.

மிதிலையின் அரசன் சிவதனுசுவை வேள்விச்சாலையில் வைத்திருந்தான். அந்த வில்லைவளையப்பவருக்கே சீதை மாலை சூடுவாள் என அறிவித்திருந்தான். எத்தனையோ அரசர்கள் வில்லை வளைக்க முடியாமல் திரும்பிச் சென்றனர்.

இராமனுக்கு சீதையை மணமுடித்து வைப்பதற்காகவே முனிவர் அவர்களை அழைத்துக் கொண்டு மிதிலை வந்திருந்தார்.

இராமனும் இலக்குவனும் மறுநாள் சனகருடைய வேள்விச்சாலையை அடைந்தனர். சனகர் வேள்விமுடிந்ததும் அம்மன்னனின் திருஓலக்க மண்டபத்தில் விசுவாமித்திரர், இராம இலக்குவருடன் தங்கினார். சனகன் இருவரின் இணையற்ற எழில் கண்டு இவர்கள் யார்? என்று கேட்டான்.

அதற்கு முனிவர், 'இசைமிக்க தயரதனின் மக்கள். உன் விருந்தினர்களாக வந்துள்ளனர். உன் வேள்வியைக் காணவந்தனர். அது முடிந்து விட்டதால் இனி உன் வில்லையும் காண்பர்' என்றார்.

முனிவர் 'உன் வில்லையும் காண்பர்' என்று சொன்னதும் சனகன் ஏவலாளரை அழைத்து வில்லை கொண்டு வரச் சொன்னான் அறுபதாயிரம் ஆற்றளர் வில் கொணர்ந்தனர்

இராமன் முனிவரைப் பார்க்க முனிவர் குறிப்பால் வில்லை வலைக்கும் படி உணர்த்தினார்.தோகையர் பல பேசிட நல்லோர் ஓகை விளம்பிட உம்பர் உவப்ப மாகமடங்கலும் மால் விடையும் பொன்நாகமும் நாகமும் நாண வில்லை நோக்கி இராமன் நடந்தான் வில்லை எடுத்தான், நாண் ஏற்றினான், அங்கிருந்துவர்கள் இமையாது பார்த்துக் கொண்டிருக்கும் போதே வில் இற்றதைக் கேட்டனர்.

இராமனின் தந்தை தயரதனுக்குச் செய்தி அனுப்பப்பட்டது. அவனும் நால்வகைப் படையும் சூழ மிதிலைக்கு வந்தான். சனகன் எதிர் கொண்டு அழைத்து அவரவர்களை தங்க வைத்தான்.

மறுநாள் திருமணத்துக்கு எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. மறுநாள் தயரத மன்னன் திருமண மண்டபத்துக்கு அனைவருடனும் வந்தான். அனைவரும் தம் தம் இருக்கையில் அமர்ந்தனர்.

வசிட்டர் அந்தணர்களுடன் வந்து சேர்ந்தார். திருமண ஏற்பாடுகளைத் தொடங்கினார்.இராமனுக்கும் சீதைக்கும் இனிதே திருமணம் நடைபெற்றது இராமன் சீதையுடன் தன் இருப்பிடம் அடைந்தான். இருவரும் இனிதே மகிழ்ந்து இருந்தனர்.எல்லாரும் சனக மன்னனுடைய விருந்தினர்களாக சில நாள்கள் தங்கி இருந்தனர்.

விசுவாமித்திரர் மணமக்களுக்கு வாழ்த்து கூறிவிட்டு இமய மலைக்குப் புறப்பட்டு போனார்.

அது சரி! முனிவர் இராமனை அயோத்தியில் இருந்து அழைத்துக் கொண்டு வந்தார். மீண்டும் அயோத்திக்கு அரழத்துக் கொண்டு சேர்ப்பது தானே முறை! இடையில் மிதிலையில் அவனை விட்டுச் செல்வனேன்?

தயரதன் மிதிலை வந்த போது இராமனை மணக்கோலத்துடன் தயரதனிடம் ஒப்படைத்து விட்டோம் என்று நினைத்திருக்கலாமோ?

ஒருவர் வீட்டிற்குச் சென்று கடனாகப் பணம் வாங்கி வருகிறோம். சில நாள்கள் கழித்து பணத்தை திருப்பித்தர எண்ணுகிறோம். அந்த நண்பர் ஒரு அலுவல் காராணமாக ஒரு வீட்டிற்கு வருகிறார். அங்கு நாமும் செல்கிறோம். அவரைப் பார்த்து அவரிடம் வாங்கிய பணத்தை அவ்வீட்டிலேயே தரலாமா?

அயோத்தியிலிருந்து அழைத்து வந்த இராமனை அயோத்தியில் கொண்டு சேர்ப்பதுதானே முறை! அதைத் தவிர்த்து மிதிலையில் அவனை விட்டுச் செல்வது முறைதானா! இதுஏன்?

இராமன், சீதை, தயரதன் முதலியவர்கள் அயோத்திக்கு புறப்பட்டு போகும் போது வழியில் பரசுராமன். எதிரே வருவான். அவர் இராமனிடம் வம்புக்கு வருவான். பரசுராமனிடம் இராமன் தன் வீரத்தைக் காட்டட்டும் என்று நினைத்தாரோ?

தோள் வலிமையையும் தொடுகழல் கமலம் அன்ன தாள் ஆற்றலையும் கண்ட அவர், தடக்கை திறம்கண்ட அவர் மீண்டும் இராமனின் வீரம் காண வேண்டுமா என நினைத்திருக்கலாம்.

விசுவாமித்திரரின் தமக்கை மகன் பரசுராமன் தன் தமக்கை மகனை நேரில் கண்டால் அவர் இராமனுடன் மோதுவதைத் தவிர்க்க வேண்டிவரும். அவ்வாறு செய்தால் நல்ல வில்லை வளைத்து நாணேற்ற இராமனுக்குத் திறன் உண்டு என உலகுக்குச் சான்றளிக்க முடியாதல்லவா! மேலும் பரசுராமனின் கர்வம் அழியாமல் போயிருக்கும் அல்லவா? இப்படியும் இருக்கலாமோ!

இராமன் ஆற்ற வேண்டிய பெரிய காரியம் உள: அவை முடிப்பது பின்னர் என .ராமனுக்கு உணர்த்தி அவதார நோக்கத்தை நிறைவேற்ற முனைந்தார். அதனால் தான் யாரும் அழைக்காமல் தானே வலிய வந்து தயரதனிடம் இராமனை அனுப்பும்படி கேட்டு அழைத்துச் சென்றாரோ? அவதார நாயகனான இராமனுக்கு நன்மையை செய்து விட்டு அவன் நோக்கம் நிறைவேற தான் ஒருகால் கோளாக இருந்தார்.

கால்கோள் போட்டாகி விட்டது இனி தனக்கு வேலையில்லை என அப்பொழுதே புறப்பட்டுச் சென்றிருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது. "விசுவாமித்திரர் எனும் பாத்திரம் இமயச்சிகரமென உயர்ந்த ஒரு பாத்திரம். வேதியியலில் கிரியா ஊக்கி (Catalyst) எனப்படும் பொருள் போல் காரியங்கள் நிறைவேற ஊக்குவித்த ஓர் ஒப்பற்ற பாத்திரம்" என சான்றோர் சொன்னபடி அது ஒரு சிறந்த பாத்திரம். அவர் மிதிலையிலிருந்து இமயம் சென்றமைக்கு இதுவும் ஒரு காரணமாக இருக்கலாம். இருடிகளின் மனதை யாரே அறிவார்!

# கம்பன் எம்மான்

## கம்பனடிப் பொடி

முன்னை நூல்கள் கற்றுணர்ந்தான் மூவா முதலை முற்றறிந்தான்
கன்னித் தமிழும் ஆரியமும் காதல் கூரத் தோய்ந்தாய்ந்தான்
பின்னும் மொழிகள் சிற்சிலவும் பிறங்கும் கலைகள் பற்பலவும்
தன்னுள் தேக்கி ஒளிகொண்டான் தமிழ்த்தாய் நோற்ற தனிக்கம்பன்

எண்ணும் எழுத்தும் இலக்கமுடன் எழிலார் சிற்பம் கட்டடங்கள்
பண்ணும் பரத கலைமுதலாப் பண்டை வரலாற்று உண்மைகளும்
நண்ணும் இயற்கை யியலுடனே நவிலும் பூத வேதியியல்
கண்ணும் கருத்தும் கண்டுணரக் கம்பன் அவனே நல்ஆசான்

பாத்தி ரங்கள் படைப்பதிலும் படைத்த வற்றை இயக்கலிலும்
சாத்தி ரங்கள் விரிப்பதிலும் தருமம் நீதி உரைப்பதிலும்
தோத்தி ரங்கள் இசைப்பதிலும் தொன்மை மரபைக் காப்பதிலும்
மூத்த கவிஞர்ப் போற்றலிலும் முன்னே நிற்பான் கவிகம்பன்

பதியை உணர்த்திப் பசுவாம்நம் பாசம் அகல வழிகாட்டி
விதியை விளக்கிப் பின்னும்நாம் வினையை அறுக்கும் நெறிபுகட்டி
மதியைத் தெளிவு பெறச்செய்து மன்னும் இன்பம் பொருள் அறமாம்
கதியைப்பற்றி வீடுபெறக் கம்பன் நல்ல துணைஆவான்

எந்த மதத்தும் குறைகாணான் எல்லாம் இறைசேர் நெறிஎன்பான்
சொந்த மொழியைப் போற்றிடுவான் தூற்றான் மொழிகள் வேறெவையும்
சிந்தை அன்பு செழித்திடுவான் செய்கை அறமாய் மலர்ந்திடுவான்
அந்தக் கவிஞன் நம்கம்பன் அவனே கவிச்சக் கரவர்த்தி

நல்ல பொருளைத் தான்அறிவான் நாடும் முறையை நன்கறிவான்
தொல்லை அறங்கள் நுனித்தறிவான் தூய அன்பைக் கணித்தறிவான்
வெல்லத் தமிழின் வீறுஅறிவான் விளம்பும் அமைதி மிகஅறிவான்
எல்லை இல்லாப் புலமைநலம் இசைந்த கம்பன் எம்மானே

என்ற உண்மை தனைஅறிந்தே இராம காதை புலப்படுத்தும்
ஒன்றே ஆன பரம்பொருளை உள்ளத்து இருத்தி எஞ்ஞான்றும்
நன்றே நினைந்து நன்றுரைத்து நன்றே புரிந்து நாளெல்லாம்
பொன்றல் இல்லாக் கம்பன்உரை புனித வழியே மேற்கொள்வோம்.

# கம்ப காவியம் கடமை ஓவியம்

காந்தியக் கவிநிலா டாக்டர். க.பரமசிவன்
ஆரணி.

காட்டுக்குச் செல்க என்று கட்டளை பிறந்தபோது
"கடமை" ஈதென்று சொல்லி இராமனும் நடந்தான் கண்டோம்
ஆரண்யம் அண்ணன் சென்றால் அவனுடன் நானும் செல்வேன்
ஈது என் "கடமை" என்றே இலக்குவன் சாட்சி சொன்னான்!

என்னவன் காடு சென்றால், எனக்கிங்கே என்ன வேலை
மன்னவனோடு செல்லும் மகிழ்ச்சியே பெரிதாம் என்று
கல்லென்ன, முள்தான் என்ன, கணவன் தான் மெத்தை என்று
நல்லவள் சீதை சொல்லி நடந்ததும் "கடமை"தானே!

தன்னவள் -சனகன் பெற்ற தையலாம் சீதை தன்னை
மன்னவன் தொலைத்தபோது மாநிலம் முழுதும் தேடி,
தென்னவன் இலங்கைத் தீவின் திரைகடல் தாண்டிச்சென்று
தேவியை மீட்டுவந்த செய்கையும் "கடமை" தானே !

கடமையை எடுத்துச் சொல்லும் காவியம் படைத்த கம்பன் - தன்
கடமையை உணர்ந்த மேலோன் ஆதலால் காப்பியத்தில்
சடையப்பவள்ளல் என்ற சான்றான்மை குன்றைப் போற்றி
முறைமையாற் "கடமை" செய்தான் கடனறி புலவன் கம்பன்



# கம்பரை வாழ்த்தியே வாழ்வோம்

கவிஞர். வே. இரா. சிவஞானவள்ளல்
வேலூர் - 9.

அந்தநாள் தமிழர் பண்புகள் அனைத்தும்
அரும்பெறல் இராமனுக் காக்கி
எந்தமிழ் மக்கள் உளத்தினில் தெய்வம்
எனும்நிலைக் குயர்த்திய கம்பர் !
முந்துறும் கவிஞர் எவரினும் பெரியர் !
முத்தமிழ் மொழியினை ஆளும்
சிந்தனைக் குரியர் அவர்புகழ் எல்லாம்
சீருறப் பாடியே மகிழ்வோம் !

சந்தமே சிந்தும் செந்தமிழ் விருத்தம்
சரமெனத் தந்துமே உள்ளார்!
சந்தனம் மணக்கும் பொதிகையின் தமிழைச்
சார்ந்துமே புகழ்முடி தொட்டார்!
வந்தனை யோடு கம்பரைத் தொட்டால்
வந்துரும் மனத்தினில் நிற்பார்!
கந்தனை அனைய கவின்தமிழ்க் கம்பர்
கனவினில் நினைவினில் பொலிவார்!

கம்பரின் கவியில் கற்பனை வளத்தில்
கவினுறத் தோன்றிய மாந்தர்
செம்மையாய்த் தோன்றி செம்மையர் மனத்தில்
செம்மையாய் நிலைபெறு வாரே!
அம்மனை மறப்போம் அத்தனை மறப்போம்
அவர்கவிச் சுவையினில் திளைப்போம்!
செம்மொழி என்றே செந்தமிழ் மொழியைச்
செய்தரும் கம்பரே கம்பர்!

புலவராய்த் தோன்றி புவியறம் புகன்று
புகழ்பெறும் வள்ளுவர் போலே
சிலம்பினைத் தந்து செந்தமிழ் பொலிய
செய் இளங் கோவினைப் போலே
அலகிலாத் தமிழின் அணியெலாம் நிறைவாய்
அடுக்கியே வழங்கிய கம்பர்
நலமுற தமிழின் நறுமணம் வீச
நற்பணி புரிந்தவர் அன்றோ?

அடைக்கலம் என்றே வந்தவர்க் கெல்லாம்
அடைக்கலம் தந்தவன் இராமன்!
நடையிலே நன்று நின்றுயர் வடைந்த
நாயகன் நாரணன் இராமன்!
படைக்கலம் இல்லாப் பகைவனைத் தாக்காப்
பண்பினன் நண்பினன் இராமன்!
படைத்திடும் படைப்பில் பண்புயர் படைப்பாய்
படைத்தனர் இராமனைக் கம்பர்!

கம்பரின் கவியில் தோய்ந்திடும் உள்ளம்
கன்னலின் சாறெனச் சுவைக்கும்!
கம்பரின் இனிய கற்பனை வளத்தைக்
கவியுளம் ஏற்றியே களிக்கும்!
கம்பரின் உயர்ந்த காவியம் கற்போர்
கருத்தினில் கவியொளி பரப்பும்!
கம்பரை நாடி அவர்புகழ் பாடிக்
காலமும் வாழ்த்தியே வாழ்வோம்!

# தாங்கரும் தவம்

செந்தமிழ்ச் செம்மல் பாவலர் வே.ச. ஞானப்பிரகாசம்

காணாமல் போய்விட்ட கண்மணியைத் தேடாதே
தூணாகத் தாங்கித் துயர்துடைக்கும் ஊர்நாடு
நாணாமல் உன்னை நடுவேசேர்த்துக் கொள்ளும்
பூணாரம் பூட்டும் புகழ்ந்து.

இருப்பிடமும் இல்லைபிழை என்பதறிந் தாலும்
உருகி உருகியுள் ளன்பு பெருகி
அழைத்துவரப் போகாதே ஆதரிப்பார் இன்றி
இளைத்தாலும் ஏங்காதே தூங்கு.

ஈரமில் லாதவர்கள் இப்படியும் சொல்வார்கள்
வீரம் குடிப்பெருமை மேன்மைகாப் பாளராய்த்
தம்மை நினைத்துத் தடம்தடு மாறுவார்
வெம்மை கொடுமை விதைப் பார்.

வள்ளல் இராமர்தன் வாழ்வரசி காணாமல்
அல்லலுற்றுக் காட்டில் அலையும் நிலையிலும்
பேரிடர்க் கில்லை பிழையென ஊர்நாட்டைக்
கோரிக்கை வேண்டார் குறித்து.

சொந்தப் படைபோலச் சுற்றமாய்ச் சூழலாய்
வந்த படையின் வலிமையால் ஆழிக்
கடலைக் கடக்கவோர் பாலமும் கட்டி
அடுபகை வீழ்த்தி வென் றார்.

தனிமைப் படுத்திக் கடத்திப் பறந்த
அணியாய வேதனை ஆழ்ந்த இராமர்
அருந்தவச் சீதை அரசியை மீட்ட
பெருந்தவ மேதவம் பேசு.

# "கவியரசு" கம்பன் புகழ்

கவிஞர். மா.சோதி

30,எம்பெருமாள் தெரு. ஆர்க்காடு - 632 503. வேலூர் மாவட்டம்.

இசைப்பாட்டால் பயிர்செழித்து மகசூல் கூடும்

இருநாக்கு நாகங்கள் படமெடுத் தாடும் !

அசைபோடும் மாடுகளும் தலையை ஆட்டும் !

ஆலயத்தின் கதவுகளும் திறந்திடச் செய்யும்

விசைமுடுக்கி விட்டார்போல் மக்கள் கூட்டம்

வளைந்தாடி கைதட்டி மகிழ்ச்சி யூட்டும் !

அசையாத மனங்கூட அசைந்து நிற்கும்

அற்புதக் கம்பன்கவி அனைத்துங் காட்டும் !

காலத்தால் அழியாத காவியம் தந்தார் !

கன்னித்தமிழ் அன்னைக்கு மகுடம் வைத்தார் !

ஞாலத்தில் நிலையான பெயரும் பெற்றார் !

ஞானத்தால் 'கவியரசு' பட்டம் கண்டார் !

சீலத்தில் இமயமாய் சிறந்து விட்டார் !

சீர்தந்த சடையப்பர் பெருமைச் சொன்னார் !

பாலத்தின் தூண்களானப் பாடல் தன்னில்

பைந்தமிழர் பண்பாட்டை மிளிர விட்டார்



# எழில் இராம காதை வாழ்க !

இரா. சீனிவாசன், குமரன் மருத்துவமனை, வேலூர்-6

காலத்தின் கொடையாய் மண்ணில்
கனிந்ததே இராம காதை.
ஞாலத்தில் வாழ்வோர் நெஞ்சில்
நிறைந்திடும் உணர்வு முற்றும்
தாளத்திற் கேற்ற பண்ணாய்த்
திகழ்வது கம்பன் தந்த
சோலையாம் இராம காதை
தொடுபவர் ஆவார் மேதை !

கம்பனில் மூழ்கும் தோறும்
களிப்புறும் சிந்தை ; தீய
வம்புகள் வளர்க்கும் எண்ணம்
முற்றுமாய் மாறும் ; ஓடும்
கும்மிருட் டதனில் வாடும்
குறையறி வுடையோ ரெல்லாம்
கம்பனை ஊன்றிக் கற்றால்
கூரறி வாளர் ஆவார்!

உண்மை வாய்மை நேர்மை
உறவுகள் போற்றும் மேன்மை
மென்மையாய் காதல் வாழ்வும்
மேதினி போற்றும் வண்ணம்
அண்ணன்நல் தம்பி பாசம் ;
அளவிலா இயற்கைக் காட்சி
எண்ணில்லா வண்ணம் தோய்ந்த
எழில்ராம காதை வாழ்க !

# மறந்தது மனிதகுலம்

**பெ. செயவேலு**, பெரிய அய்யம்பாளையம்.

காவிய ராமனைக் காட்டினான் கம்பன்
ஓவியம் தீட்டினான் ராம காதையை
பாவிய ஒளிபோல் பரவின தமிழகம்,
மேவிய காவியம் ராமா யணமே.

தமிழிலே கம்பனும் காதலைக் காட்டினான்
தண்டமிழ் உலகமே கண்வைத்து வியந்தது,
வண்டமிழ்ப் புலவன் கம்பனே என்றிட
வள்ளல் ராமனின் வாழ்வை விளக்கினான்.

வடக்கில் ராம காதையைக் கண்டுமே
வடித்தனன் தமிழில் வள்ளல் கம்பனே
ஒருவனுக் கொருத்தி என்றே பகன்றனன்
மறுப்பு இன்றியே உலகம் ஏற்றது.

இன்றைய நாளில் உயிர்க்கொல்லி நோயை
கண்டபின் உணர்ந்தே திருந்திய மனிதன்
அன்றையே உலரத்த கம்பனின் சொல்லை
மறுப்பின்றி மறந்தது மனித குலமே.



# தெரிந்து கொள்ளுங்கள்

B.A – க.இ – கலைஇளைஞர்

B.Com – வணி.இ., – வணிகஇளைஞர்

B.E – பொறி.இ., – பொறியியல் இளைஞர்

B.Ed – கல்.இ., – கல்விமுறைஇளைஞர்

B.G.L – பொ.ச.இ., – பொதுசட்டஇளைஞர்

B.Lib.sc – நூ.அறி.இ. – நூலக அறிவியல்இளைஞர்

B.Lit., – இல.இ – இலக்கிய இளைஞர்

B.L., – ச.இ – சட்ட இளைஞர்

B.O.L., – கீ.க.இ., – கீழைக் கலை இளைஞர்

B.Sc., – அறி.இ – அறிவியல்இளைஞர்

B.Sc(Agri)., – அறி.இ – வேளாண்அறிவியல்இளைஞர்

B.T., – ப.இ – பயிற்றுஇளைஞர்

B.V.sc., – வி.க.இ – விலங்கியற்கலை இளைஞர்

C.E.O., – ந.சு.அ – நடுவண் சுங்கவரிஅதிகாரி

C.E.O., – மு.க.அ. – முதன்மைக் கல்விஅதிகாரி

C.I.D., – கு.ஆ.து – குற்ற ஆய்வுத்துறை

D.E.O., – மா.க.அ – மாவட்டக் கல்வி அதிகாரி

D.LIT., – இல.மு – இலக்கிய முனைவர்

D.M.O., – மா.ம.அ. – மாவட்டமருத்துவத்துறை அதிகாரி

D.M.S., – ம.அ.மு. – மருத்துவ அறுவைச் சிகிச்சை முனைவர்

D.M.S., – ம.ப.இ – மருத்துவப் பணித்துறை இளைஞர்

I.A.S., – இ.ஆ.ப. – இந்திய ஆட்சித்துறைபணி

I.C.S. – இ.பொ.ப. – இந்தியப் பொது ஆட்சிப்பணி

M.A., – க.மு – கலை முதுவர்

M.B.B.S., – ம.இ.அ.இ – மருந்தியல் இளைஞர்அறுவை இளைஞர்

M.Com., – வணி.மு – வணிக முதுவர்

| | | |
|---|---|---|
| M.D., | – ம.மு | – மருத்துவத்துறை முனைவர் |
| M.L., | – ச.மு. | – சட்டத்துறை முதுவர் |
| M.L.A. | – ச.ம.உ. | – சட்டமன்ற உறுப்பினர் |
| M.L.C. | – ச.மே.ம.உ. | – சட்ட மேல் மன்ற உறுப்பினர் |
| M.Lib.Sc., | – நூ.அறி.மு. | – நூலக அறிவியல்முதுவர் |
| M.Lit., | – இல.மு | – இலக்கிய முதுவர் |
| M.O.L., | – கீ.க.மு. | – கீழைக்கலை முதுவர் |
| M.S. | – அ.மு. | – அறுவைமுதுவர் |
| M.sc., | – அறி.மு. | – அறிவியல்முதுவர் |
| Ph.D., | – மெய்.மு | – மெய் விளக்கத்துறை முதுவர் |
| M.ED., | – கல்.மு | – கல்விமுதுவர் |
| M.Phill., | – மொ.மு | – மொழியியல் முதல்வர். |

நன்றி – குறளியம்